# பெண்ணரசிகள் பற்றி

**பொருளடக்கம்**

PDFஇஸ்லாம்WEB

PDFஇஸ்லாம்TELEGRAM

# பொன்மறை குர்ஆன்

ஆசிரியர்: முஹம்மது பந்தர்
மௌலானா மௌலவி ஹாபிழ்
ஹாஜா முஹ்யித்தீன் சிராஜி

வெளியீடு:
ஜுவைரிய்யா பதிப்பகம், தஞ்சாவூர்.

# பெண்ணரசிகள் பற்றி பொன்மறை குர்ஆன்

M.K. Mohamed
Selma
Fathima

ஆசிரியர்:
முஹம்மது பந்தர்
மௌலானா மௌலவி ஹாபிழ்
**H. ஹாஜா முஹியித்தீன் சிராஜி**
ஆசிரியர் ஜாமிஆ ஷைம்சுல் ஹிதாயா
அரபி மத்ரஸா
10. ஹாஜியார் தெரு
திட்டச்சேரி 609703
நாகை மாவட்டம்.

[illegible] பதிப்பகம்
2 58, மேட்டுத்தெரு, முஹம்மது பந்தர்.
தஞ்சை மாவட்டம்.

# பொருளடக்கம்

முதற்பதிப்பு :

ஹிஜ்ரி 1420 ஷஃபான்
கி.பி. 1999 நவம்பர்

இரண்டாம் பதிப்பு :

ஹிஜ்ரி 1423 ரபீவுல் அவ்வல்
கி.பி. 2002 மே



ஹதியா : ரூ. 12-00

கிடைக்குமிடங்கள் :

**Y. ஹபீப் ரஹ்மான்**
2/47, மேட்டுத் தெரு,
முஹம்மது பந்தர் - 613 201.
தஞ்சை மாவட்டம்.

**காஜியார் புக் டிப்போ,**
M. சாவடி,
தஞ்சாவூர்.

**பஷாரத் பப்ளிஷர்ஸ்,**
83, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை-1.

*அல்மதனி பிரிண்டிங் ஒர்க்ஸ்,*
தென்னூர் ஹைரோடு பள்ளிவாசல், திருச்சி-17. போன் : 767313

தமிழ் மாநில ஜமாஅத்துல் உலமா பேரவையின் இணைச் செயலரும், தஞ்சை மாவட்ட ஜமாஅத்துல் உலமா சபையின் கொறடாவும்; ஹையத்துஷ் ஷரீய்யாவின் செயற்குழு உறுப்பினருமான மௌல்னா மௌலவி அல்ஹாஜ் ஆலூர் **M. அப்துஷ் ஷக்கூர் பாஜில் மன்பஈ ஆலிம்** அவர்களின்



## வாழ்த்துரை

அன்பிற்குரிய வாசகர் பெருமக்களுக்கு

மௌலவி ஹாபிழ் H. ஹாஜா முஹியித்தீன் சிராஜி அவர்களால் எழுதப்பட்ட இச்சிறு நூலை அவர்களாலேயே படிக்கக் கேட்டேன். மனிதகுலத்திற்கு வழிகாட்டவந்த வான்மறையின் வற்றாத சுனை அருவியாக, இலக்கியப் படைப்பாக இந்நூல் உங்கள் கைகளிலே தவழ்கிறது. படியுங்கள்! படிப்பினை பெறுங்கள்! மேலும் மௌலவியின் கன்னிப்படைப்பு இது. இன்னும் எண்ண முடியா எழுத்துப் படைப்புகளை அவர் படைக்க வல்ல ரஹ்மான் தௌபீக் செய்வானாக! ஆமீன்.

வஸ்ஸலாம்.

இப்படிக்கு

**மௌலவி M. அப்துஷ் ஷக்கூர் ஆலிம்**

**பாஜில் மன்பஈ**

தஞ்சை மாவட்ட ஜமாஅத்துல் உலமா சபையின் தலைவரும், கும்பகோணம் பெரியபள்ளிவாசலின் தலைமை இமாமுமான மௌலானா மௌலவி ஹாபிழ் அல்ஹாஜ் **T.S. ஷீது முஹம்மது உலவி ஹலரத்** அவர்களின்

## அணிந்துரை

கண்ணியம் நிறைந்த மௌலவி H. ஹாஜாமுஹியித்தீன் சிராஜி அவர்கள் குர்ஆனில் வரக்கூடிய பெண்களின் சம்பவங்களை மிக எளிதாக லேசாக நமக்கு படிக்கத் தந்துள்ளார்கள். ஆண் திருந்தினால் அவர் மட்டுமே திருந்துவார்; ஆனால் ஒரு பெண் திருந்தினால் அப்பெண்ணின் பெற்றோர், கணவன், குழந்தைகள், சகோதர சகோதரிகள் அனைவருமே திருந்துவ; என்கின்ற அனுபவப் பாடத்தின்படி சகோதர மௌலவி முயற்சி எடுத்துள்ளார். (நன்மை) ஆவதும் பெண்ணாலே! (தீமை) அழிவதும் பெண்ணாலே! ஆதலால் தாய்க்குல சமுதாயம்; சன்மார்க்க வழி நடக்க இந்நூல் உதவும் என நம்புகிறோம்.

இப்படிக்கு

T.S. ஷீது முஹம்மது உலவி



# என்னுரை

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

எல்லாப் புகழும் புகழ்ச்சியும் அகிலத்தையும் அதில் உள்ள அனைத்தையும் படைத்து உணவளித்து, இரட்சித்து பாதுகாத்து பரிபாலித்து வரக்கூடிய எல்லாம் வல்ல அல்லாஹு தஆலாவுக்கே உரித்தானது.

அவனின் வற்றாத கருணையும், ஈடு இணை இல்லாத ஈடேற்றமும் மனிதப் புனிதர் ஈருலக நாதர்; அண்ணல் எங்கள் கோமான்; அரபுலகின் பூமான் அருமை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மீதும் அவர்களின் கிளையார்கள், தோழர்கள், இறைநேசச் செல்வர்கள் அவர்களைப் பின்பற்றி வாழ்கின்ற அனைத்து நல்லடியார்கள் மீதும் என்றென்றும் சொரிந்து கொண்டே இருக்கட்டுமாக! ஆமீன்!

திருக்குர்ஆன் கூறிக் காட்டும் சுமார் 15 பெண்களைப் பற்றி எழுத ஆவல் கொண்டேன். இதில் அவர்களின் வரலாறு முழுவதும் குறிப்பிடப்படவில்லை. அவர்களைப் பற்றி திருமறையில் எப்படி கூறப்பட்டுள்ளதோ அதையும்; அதன் விளக்கத்தையும், அதை ஒட்டிய வரலாற்றையும், அதன் மூலம் ''நமக்கு என்ன படிப்பினை'' என்பதையும் இங்கு விளக்கப்படுகிறது.

ஆகவே அதை தெரிந்து அதன்படி நாமும் நம் வாழ்வை சரிசெய்து கொள்வதற்கு அல்லாஹ் நம் அனைவருக்கும் நல்லருள் புரிவானாக! இச்சிறு நூல் வெளிவர காரணமாக இருந்த அனைத்து பெரியார்களுக்கும் ஈருல நற்பயனை அல்லாஹ் பூரணமாக வழங்குவானாக! ஆமீன்!

H. ஹாஜா முஹியித்தீன் சிராஜி

# பொருளடக்கம்



| | உள்ளே | பக்கம் |
|---|---|---|
| 1. | ஆதம் (அலை) அவர்களின் மனைவி ஹவ்வா (அலை) சூரா-2-வசனம்: 35 | 8 |
| 2. | இம்ரான் என்ற அரசனின் மனைவி ஹன்னா சூரா - 3 வசனம்: 35 | 13 |
| 3. | இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சாரா (அலை) சூரா-11 வசனம்: 71, 72, 73 | 14 |
| 4. | இப்ராஹீம் (அலை) அவர்களின் இன்னொரு மனைவி ஹாஜரா (அலை) சூரா-14 வசனம்: 37 | 16 |
| 5. | லூத் (அலை) அவர்களின் மனைவி சூரா-11 வசனம்: 81 | 18 |
| 6. | யூசுப் (அலை) அவர்களின் எஜமாட்டி பிறகு அவர்களின் மனைவி சூரா- 12 வசனம்: 21 | 20 |
| 7. | மர்யம் (அலை) சூரா-19 வசனம்: 15, 16, 17, 18 | 22 |
| 8. | ஜகரிய்யா (அலை) அவர்களின் மனைவி ஈஷாஉ சூரா - 21 வசனம்: 89, 90 | 24 |

# பொருளடக்கம்



பக்கம்

9. ஸபா நாட்டின் இளவரசி பிறகு சுலைமான் (அலை) அவர்களின் மனைவி

சூரா- 27 வசனம்: 29, 30, 31 — 28

10. மூஸா (அலை) அவர்களின் தாய் யூகாநிதா

சூரா-28 வசனம்: 7 — 33

11. பிர்அவ்னின் மனைவி ஆஸியா அம்மையார்

சூரா-28 வசனம்: 8 — 36

12. மூஸா (அலை) அவர்களின் சகோதரி மர்யம்

சூரா-28 வசனம்: 11, 12 — 39

13. மூஸா (அலை) அவர்களின் மனைவி ஸபூரா

சூரா-28 வசனம்: 29 — 42

14. பெருமானார் (ஸல்) அவர்களின் மனைவிமார்கள்

சூரா-33 வசனம்: 28, 29 — 50

15. முஃமினான பெண்கள்

சூரா-33 வசனம்: 35 — 53

# 1. ஆதம் (அலை) அவர்களின் மனைவி ஹவ்வா (அலை)

ஆதம் (அலை) அவர்களை ஆரம்ப மனிதராக படைத்து அவர்களுக்குத் துணையாக ஹவ்வா (அலை) அவர்களை அல்லாஹ் படைத்தான். ஆதம் (அலை) அவர்களுக்கும், ஹவ்வா (அலை) அவர்களுக்கும் அல்லாஹ் கூறினான்:

وَقُلْنَا يَآدَمُ اسْكُنْ أَنْتَ وَزَوْجُكَ الْجَنَّةَ وَكُلَا مِنْهَا رَغَدًا حَيْثُ شِئْتُمَا وَلَا تَقْرَبَا هَٰذِهِ الشَّجَرَةَ فَتَكُونَا مِنَ الظَّٰلِمِينَ ۝

மேலும் "ஆதமே நீரும் உம் மனைவியும் இச்சுவனபதியில் குடியிருங்கள். மேலும் அதிலிருந்து விரும்பும் உணவை தாராளமாக விரும்பிய இடங்களில் நீங்கள் இருவரும் உண்ணுங்கள். ஆனால் நீங்கள் இருவரும் இம்மரத்தை நெருங்க வேண்டாம். (நெருங்கினால்) அப்பொழுது நீங்கள் இருவரும் அக்கிரமக்காரர்களில் உள்ளவர்களாக ஆகிவிடுவீர்கள் என்று நாம் சொன்னோம். சூரா-2 அல்பகரா வசனம்: 35

இருவரும் சுவர்க்கத்தில் சந்தோஷமாக இருந்து வரும்போது ஷைத்தான் தான் சுவர்க்கத்தை விட்டும் வெளியேறுவதற்குக் காரணமாக இருந்த ஆதத்தை எப்படியும் சுவர்க்கத்தைவிட்டு வெளியேற்றி விட வேண்டும் என்று திட்டம் தீட்டி ஆதம் (அலை) அவர்களிடத்தில் கூறினான்.

وَقَالَ مَا نَهٰىكُمَا رَبُّكُمَا عَنْ هٰذِهِ الشَّجَرَةِ اِلَّآ اَنْ تَكُوْنَا مَلَكَيْنِ اَوْ تَكُوْنَا مِنَ الْخٰلِدِيْنَ ﴿۲۰﴾

அவன் கூறினான்; இந்த மரத்தை விட்டும் உங்களுடைய ரப்பு உங்களிருவரையும் (அதன் பழத்தைப் புசிப்பதால்) நீங்களிருவரும் இரு மலக்குகளாக ஆகிவிடுவீர்கள். அல்லது இச்சொர்க்கத்திலேயே நிரந்தரமாய் தங்குபவர்களில் உள்ளவர் களாக நீங்களிருவரும் ஆகிவிடுவீர்கள் என்பதற்காகவேயன்றி தடுக்கவில்லை என கூறினான். சூரா-அஃராப், வசனம்: 20

இதை ஆதம் (அலை) ஏற்றுக் கொள்ளவில்லை. இதேவிதமாக ஹவ்வா (அலை) அவர்களிடம் கூறியபோது நீண்டநாள் நிரந்தரமாக சுவர்க்கத்தில் தங்க வேண்டும் என்ற ஆசையில் அக்கனியை தானும் உண்டு தன் கணவரையும் உண்ண வைத்தார்கள். அதன் காரணமாக சுவர்க்கத்தை விட்டும் வெளியேற்றப்பட்டார்கள். இதைப்பற்றி அல்லாஹ்,

فَاَزَلَّهُمَا الشَّيْطٰنُ عَنْهَا فَاَخْرَجَهُمَا مِمَّا كَانَا فِيْهِ

எனினும் ஷைத்தான் அவர்கள் இருவரையும் அதிலிருந்து தவறச் செய்து; அவர்களிருவரும் இருந்த உயர்வான நிலையைவிட்டு அவ்விருவரையும் வெளியேற்றி விட்டான்.

சூரா அல்பகரா வசனம் - 36

இப்படி இருவரும் இரு வேறு இடங்களில் இறக்கி விடப்பட்டனர். இதை நினைத்து ஆதம் (அலை) சுமார் 300 வருடம் பாவமன்னிப்பு தேடினார்கள்.

قَالَا رَبَّنَا ظَلَمْنَا أَنْفُسَنَا وَإِنْ لَمْ تَغْفِرْ لَنَا وَتَرْحَمْنَا لَنَكُونَنَّ مِنَ الْخَاسِرِينَ ﴿٢٣﴾

''எங்களுடைய ரப்பே! எங்களுக்கு நாங்களே அநியாயம் செய்து கொண்டோம். எங்களை நீ மன்னித்து எங்களுக்கு கிருபை செய்யவில்லையானால், உறுதியாக நாங்கள் நஷ்டவாளர்களில் நின்றும் ஆகி விடுவோம்'' என்று அவ்விருவரும் கூறினார்கள்.

ஸூரா 7 அல்அஃராப், வசனம்: 23

அப்போது அவ்விருவர்களையும் அல்லாஹ் மன்னித்து ஒன்று சேர்த்து வைத்தான். அவ்விருவரும் இவ்வுலகில் சுமார் 120 வருடங்கள் பல குழந்தைகளைப் பெற்று வசித்து சந்தோஷமாக வாழ்ந்து சென்றார்கள்.

இதில் நமக்கு பல படிப்பினைகள் உள்ளது.

1. தவறு செய்தல் 2. பாவமன்னிப்புத் தேடுதல். தவறு என்பது இரண்டு வகை: மனிதன் மனிதனுக்குச் செய்யக்கூடிய தவறுகள். உதாரணமாக ஒருவன் இன்னொருவனை திட்டுவது; அடிப்பது இது போன்றது.

1. ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்குத் தீங்கு விளைவித்து விட்டால் அதற்காக அவனிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும். ஏனெனில் தவறு செய்தவன் பாதிக்கப்பட்டவனிடம் மன்னிப்பு கேட்காதவரை தவறு

செய்தவனை இறைவன் மன்னிப்பதில்லை. ஆகவே தவறு செய்தவன் பாதிக்கப்பட்டவனிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும்.

2. இறை கட்டளைகளை நிறைவேற்றாமல் இருப்பதும் ஒரு தவறுதான். உதாரணமாக தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் இதுபோன்ற இறைவனால் கடமையாக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்றாமல் இருப்பது. இதற்கு பரிகாரம் என்னவென்றால் அவைகளை இன்று முதல் நிறைவேற்ற வேண்டும். இனி என் உடலில் உயிர் இருக்கும் காலமெல்லாம் அவைகளை விட்டுவிட மாட்டேன் என தன் மனதில் உறுதி எடுத்துக் கொள்வதுடன் இதுவரை விட்டுப்போனவைகளை நேரம் கிடைக்கும் போதெல்லாம் அவைகளை (களா செய்வது) நிறைவேற்றுவது.

3. இறைகட்டளைகளுக்கு மாறு செய்வது. இது இரண்டு வகை: முதலாவது இறைவனால் தடுக்கப்பட்ட காரியங்கள் என்னவென்று தெரிந்திருந்தும் வேண்டுமென்றே அவைகளைச் செய்வது. இப்படி ஒரு மனிதன் செய்தால் அவன் அதை நினைத்து அழுது இறைவனிடம் பாவமன்னிப்புத் தேட வேண்டும். இனி அவைகளை ஒருபோதும் செய்ய மாட்டேன் என உறுதிகொள்ள வேண்டும். செய்யாமலும் இருக்க வேண்டும். அது ஞாபகம் வரும்போதெல்லாம் அழுது தொழுது அல்லாஹ்விடத்தில் பாவமன்னிப்புத் தேட வேண்டும். அப்படிச் செய்தால் அவனை அல்லாஹ் மன்னித்து விடுவான்.

இரண்டாவது இறைவனால் தடுக்கப்பட்ட காரியம் என்னவென்று தெரிந்திருந்தும் தன்னை அறியாமல் அவைகளில் ஒன்றையோ, சிலதையோ செய்து விடுவது. இது போன்றதுதான் ஆதம் ஹவ்வா (அலை) ஆகிய இருவரும் செய்தது. அதைப்பற்றி உணர்ந்ததும் அழுதார்கள். இறைவனிடம் பாவமன்னிப்புத்

தேடினார்கள். ஆகவே அல்லாஹ் அவர்களை மன்னித்தான். இதைப்பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் குறிப்பிடும்போது சொன்னார்கள். ஆதமுடைய மக்கள் அனைவர்களும் தவறு செய்யக்கூடியவர்களே! தவறு செய்பவர்களில் சிறந்தவர்கள் யார் என்றால் அதை நினைத்து பச்சாதாபப்பட்டு வருந்தி தௌபா செய்யக்கூடியவர்களே!

இந்த ஹதீஸ் மிஷ்காதுல் மஸாபீஹ் என்ற கிதாபில் 204வது பக்கம் பாபு இஸ்திஃபாரு வத்தௌபா என்று பாடத்தில் இரண்டாவது பிரிவில் இடம்பெற்றுள்ளது. இதை அறிவிப்பவர்கள் அனஸ் (ரலி) அவர்கள். நூல்: திர்மிதி இப்னுமாஜா, தாரமீ ஆகிய ஹதீஸ் கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இதன்படி பார்க்கும்போது ஒவ்வொரு மனிதனும் தன்னை அறியாமலேயே பல தவறுகளைச் செய்து விடுகிறான். ஆனால் எப்போது தான் செய்தது தவறு என்பதை உணர்கிறானோ அல்லது பிறரால் உணர்த்தப்படுகிறானோ அப்போது அதிலிருந்து நீங்கி இனிமேல் செய்வதில்லை என உறுதி கொண்டு அது நிகழ்ந்து விட்டதற்காக வருந்தி அழுது தொழுது இறைவனிடம் பாவமன்னிப்புக் கேட்க வேண்டும். அப்படி கேட்கும்போது அவனை அல்லாஹ் மன்னித்து விடுகிறான். இதில் ஒரு நிபந்தனை என்னவென்றால் மீண்டும் அதைச் செய்யக்கூடாது. ஆகவே நாமும் இதுபோன்று பாவமன்னிப்பு தேடுவோமாக! இதுபோன்றே பாவமன்னிப்பு தேடக்கூடிய கூட்டத்தில் எல்லாம்வல்ல அல்லாஹ் நம் அனைவரையும் சேர்த் தருள்புரிவானாக! ஆமீன்!

## 2. இம்ரான் என்ற அரசனின் மனைவி ஹன்னா

இம்ரான் என்ற அரசனும் ஹன்னா என்று அம்மையாரும் கணவன் மனைவி-தம்பதிகள். அவர்களுக்கு நீண்டநாள் குழந்தை பாக்கியம் இல்லாமலேயே இருந்தது. அப்போது ஹன்னா அம்மையார் இறைவனிடம் துஆ செய்தார்கள்.

إِذْ قَالَتِ امْرَأَتُ عِمْرَٰنَ رَبِّ إِنِّي نَذَرْتُ لَكَ مَا فِي بَطْنِي مُحَرَّرًا فَتَقَبَّلْ مِنِّي ۖ إِنَّكَ أَنتَ السَّمِيعُ الْعَلِيمُ

இம்ரானுடைய மனைவி "என்னுடைய ரப்பே! நிச்சயமாக நான் என்னுடைய வயிற்றில் உள்ளதை உனக்காக (உன் சேவைக்கு) உரிமை விடப்பட்டதாக நேர்ந்து கொண்டேன். எனவே என்னிடமிருந்து அதை ஏற்றுக்கொள்வாயாக! நிச்சயமாக நீயே யாவற்றையும் செவியுறுகிறவனாகவும், முற்றும் அறிந்தவனாகவும் இருக்கிறாய்" என கூறிய நேரத்தை நினைவு கூர்வீராக!

அதன்படி ஒரு குழந்தை பிறந்தது. ஆனால் அது பெண் குழந்தையாக இருந்தது. அதற்கு மர்யம் என்று பெயர் சூட்டினார்கள். பெண் குழந்தையாக உள்ளதே எப்படி பைத்துல் முகத்தஸில் ஊழியம் செய்ய அனுப்புவது என்று யோசித்தபோது குழந்தையை பைத்துல் முகத்தஸில் விட்டு விடும்படி இறைக்கட்டளை வந்தது. அதன்படி விட்டுவிட்டார்கள். அல்லாஹ் அவர்களைப் பாதுகாத்தான். இங்கு நமக்கு என்ன

படிப்பினை என்றால் நம்முடைய ஒரு காரியம் நிறைவேற வேண்டுமானாலும் அல்லது ஏதாவது தேவை ஏற்பட்டாலும் அதற்காக இறைவனிடம் நேர்ச்சை செய்யலாம். எப்படி எனில் என்னுடைய இன்ன காரியம் நிறைவேறிவிட்டால் அதற்காக இத்தனை ரக்அத் தொழுகிறேன். அல்லது இத்தனை நோன்பு வைக்கிறேன். அல்லது இத்தனை பேருக்கு உணவு கொடுக்கிறேன் என்று நேர்ச்சை செய்ய வேண்டும்.

இறைவனால் கடமையாக்கப்பட்ட காரியங்களில் ஏதாவது ஒன்றை எத்தனை என்ற எண்ணிக்கையை குறிப்பிட்டு உதாரணத்திற்கு தொழுகையானால் (குறைந்தது) 12 ரக்அத் எனவும், நோன்பானால் (குறைந்தது) 3 எனவும், ஏழைக்கு உணவு கொடுப்பதானால் (குறைந்தது) ஒருவருக்கு எனவும் நேர்ச்சை செய்ய வேண்டும். அதிகமாகவும் செய்யலாம். எத்தனை முடியுமோ அவ்வளவும் செய்து கொள்ளலாம். ஆனால் கடமையாக்கப்பட்ட காரியங்களில்தான் நேர்ச்சை செய்ய வேண்டும். மேலும் அல்லாஹ்வுக்காக தான் நேர்ச்சை செய்ய வேண்டும. அப்படி நேர்ச்சை செய்யும் போது அவரின் கோரிக்கையை நிறைவேற்றித் தருகிறான். அந்த கோரிக்கை நிறைவேற்றப்பட்டு விட்டால் கண்டிப்பாக நேர்ச்சை செய்ததை நிறைவேற்ற வேண்டும்.

ஆகவே நமது கோரிக்கையை நேர்ச்சையின் மூலம் இறைவனிடம் கேட்டு பெறக்கூடிய நல்ல மக்களாக நம் அனைவரையும் அல்லாஹ் ஆக்கி அருள்புரிவானாக! ஆமீன்.

## 3. இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சாரா

இப்ராஹீம் (அலை) அவர்களும் சாரா அம்மையார் (அலை) அவர்களும் கணவன்-மனைவி-தம்பதிகள். இவர்களுக்கு நீண்ட

நாட்களாக குழந்தை பாக்கியம் இல்லாதிருந்தது. அப்போது இப்ராஹீம் (அலை) அவர்கள் துஆ செய்தார்கள்.

என்னுடைய ரப்பே! நல்லோர்களிலிருந்து எனக்கு ஒரு சந்ததியை அளித்திடுவாயாக என்று துஆ செய்தார்கள். சூரா-37, ஆயத்து 100.

அதன்படி அவர்களுக்கு ஒரு குழந்தையை அல்லாஹ் கொடுத்தான். அதைப்பற்றி இறைவன் குறிப்பிடும்போது

அப்போது அவருடைய மனைவி ஸாரா அங்கு நின்று கொண்டிருந்தார். பயம் நீங்கி அவர் சிரித்தார். அவருக்கு இஸ்ஹாக்கைக் கொண்டும் இஸ்ஹாக்குப்பின் யஃகூபைக் கொண்டும் நாம் நற்செய்தி கூறினோம். அதற்கு ஆ! என்னுடைய கைசேதமே! நான் கிழவியாகவும், இதோ என் கணவர் வயோதிய ராகவும் இருக்கும் நிலையில் நான் குழந்தை பெறுவேனா? நிச்சயமாக இது ஆச்சரியமான விஷயமாகும் என்று அவர் கூறினார். அல்லாஹ்வுடைய கட்டளையைப்பற்றி நீர் ஆச்சரியப்படுகிறீரோ? அஹ்லுல் பைத்துகளான இவ்வீட்டு டையவர்களே! அல்லாஹ்வுடைய ரஹ்மத்தும்; அவனுடைய பரக்கத்துகளும் உங்கள்மீது உள்ளன. நிச்சயமாக அவன் புகழுக்குரியவன். மகிமை மிக்கவன் என்று அவர்கள் கூறினார்கள்.

சூரத்துல் ஹூத்11-வது சூரா - 71, 72, 73வது வசனம்

இங்கு இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சந்தேகப்படவில்லை. ஆச்சரியத்துடன் கேட்டார்கள். அதன்படி அல்லாஹ் கொடுத்தான். இங்கு நமக்கு படிப்பினை என்னவென்றால் நாம் அல்லாஹ்வுடைய கட்டளைகளை சரியாக நிறைவேற்றி அவனுக்கு பிரியமான முறையில் நடந்து கொண்டிருக்கும்போது நமக்கு ஏதாவது தேவை ஏற்பட்டால் அது

நடைமுறைக்கு சாத்தியமில்லாமல் இருந்தாலும் அதைக் கேட்டு இறைவனிடம் முறையிடும்போது நிச்சயமாக அதை அல்லாஹ் நிறைவேற்றித் தருவான் என்பது இந்த ஆயத்திலிருந்து நமக்கு நன்றாகவே விளங்குகிறது. ஏனெனில் இப்ராஹீம் (அலை) 120 வயதும், சாரா அம்மையாருக்கு 80 வயதும் அடைந்தபோதுதான் இஸ்ஹாக் என்ற குழந்தையைக் கொடுத்தான். இது நடைமுறைக்கு சாத்தியமற்று இருந்தாலும் அவர்கள் இருவரும் இறைவனுக்குப் பிரியமாக நடந்ததால் அவர்களது வேண்டு கோளை நிறைவேற்றினான். இது ஒன்றும் இறைவனுக்கு முடியாதது இல்லையே? எனவே நிறை வேற்றினான்.

ஆகவே, நாம் அந்த இறைக்கட்டளைக்கு முழுக்க முழுக்க கட்டுப்பட்டு நடப்பவர்களாகவும், எந்தத் தேவை ஏற்பட்டாலும் அவனிடத்தில் கெஞ்சிக் கேட்டுப் பெறக்கூடியவர்களாகவும், நம் அனைவரையும் அலலாஹ் ஆக்கி அருள்புரிவானாக! ஆமீன்.

## 4. இப்ராஹீம் (அலை) அவர்களின் இன்னொரு மனைவி ஹாஜரா (அலை)

இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு இன்னொரு மனைவி இருந்தார்கள். இவர்களுக்கு பிறந்தவர்கள்தாம் இஸ்மாயீல் (அலை) அவர்கள் இஸ்மாயீல் (அலை) சிறு குழந்தையாக இருந்தபோது இவர்களையும்; இவர்களின் தாயார் ஹாஜரா (அலை) அவர்களையும் இறைவனின் கட்டளைப்படி இப்ராஹீம் (அலை) அவர்கள் தன்னந்தனியாக மனித சஞ்சாரமே இல்லாத பாலைவனத்தில் வனாந்திரத்தில் விட்டுவிட்டு செல்கிறார்கள். அப்போது அன்னை ஹாஜரா அம்மையார் கேட்கிறார்கள் எங்களை ஏன் இங்கு தன்னந்தனியாக விட்டு செல்கிறீர்கள்? அதற்கு இப்ராஹீம் (அலை) பதில் ஏதும் கூறவில்லை. இது இறைகட்டளையா என மீண்டும் கேட்கிறார்கள். ஆம்! என

தலையை மட்டும் அசைத்து விட்டு திரும்பி சென்று விடுகிறார்கள். அப்போது ஹாஜரா அம்மையார்; இது இறை கட்டளையாக இருந்தால் நீங்கள் செல்லுங்கள் எங்களை அந்த இறைவன் பாதுகாப்பான் என மிக தைரியமாக உறுதியுடன் கூறினார்கள்: அப்படி இப்ராஹீம் (அலை) விட்டு விட்டு வரும்போது தூரத்தில் நின்று துஆ செய்கிறார்கள்:

رَبَّنَآ إِنِّيٓ أَسۡكَنتُ مِن ذُرِّيَّتِي بِوَادٍ غَيۡرِ ذِي زَرۡعٍ عِندَ بَيۡتِكَ ٱلۡمُحَرَّمِ رَبَّنَا لِيُقِيمُواْ ٱلصَّلَوٰةَ فَٱجۡعَلۡ أَفۡـِٔدَةً مِّنَ ٱلنَّاسِ تَهۡوِيٓ إِلَيۡهِمۡ وَٱرۡزُقۡهُم مِّنَ ٱلثَّمَرَٰتِ لَعَلَّهُمۡ يَشۡكُرُونَ ۝٣٧

எங்களுடைய ரப்பே! நிச்சயமாக நான் என்னுடைய சந்ததியை கண்ணியத்திற்குரிய உன்னுடைய வீட்டினருகில் விவசாயமற்ற இப்பள்ளத்தாக்கில் குடியமர்த்தி இருக்கிறேன்; எங்களுடைய ரப்பே! தொழுகையை அவர்கள் நிலைநிறுத்துவதற்காக மனிதர்களில் சிலரின் இதயங்களை அவர்களின்பால் சாய்ந்ததாக நீ ஆக்கிவிடுவாயாக! அவர்கள் நன்றி செலுத்துவதற்காக அவர்களுக்கு நீ கனிவகையிலிருந்து உணவளிப்பாயாக! என துஆ செய்தார்கள். (சூரத்து இப்ராஹீம்-சூரா-14 வசனம்-37)

இங்கு நமக்கு என்ன படிப்பினை என்றால் எப்படிப்பட்ட சூழ்நிலை ஏற்பட்டாலும் அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். உயிருக்கே ஆபத்து ஏற்படும் என்ற சூழ்நிலையிலும் ஈமானை இழந்துவிடக்கூடாது.

அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கையில் குறைவு ஏற்பட்டுவிடக் கூடாது. ஹாஜரா அம்மையார் அவர்கள் அல்லாஹ்வுடைய உத்தரவு என்பதை அறிந்ததும் அமைதியாக இருந்தார்கள். பயப்படவில்லை. கவலைப்படவில்லை. வனாந்தரத்தில் தன்னந் தனியாக தன் குழந்தையுடன் வசித்துவர சம்மதித்தார்கள். காரணம் இறைவன் நமக்கு உணவளிப்பான்; இரட்சித்துப் பாதுகாப்பான் என்ற அசைக்க முடியாத உறுதி! அசைக்க முடியாத நம்பிக்கைதான். அதனால் அவர்களை அல்லாஹ் பாதுகாத்தான். அவர்களின் அந்தஸ்தை உயர்த்தினான். எந்தளவு உயர்த்தினான் என்றால் அவர்கள் சாதாரணமாக செய்த ஒவ்வொரு செயலையும் ஹாஜிகள் ஒவ்வொரு வருடமும் நினைவு கூர்வது மட்டுமல்லாது அதேபோன்றே செய்ய வேண்டும் என்றும் கட்டளையிட் டுள்ளான். அப்படியானால் ஏந்த அளவுக்கு அவர்களை அல்லாஹ் பொருந்திக் கொண்டுள்ளான் என்பதை சிந்திக்க வேண்டும்.

ஆகவே நாமும் எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் இறைவன் மீது முழு நம்பிக்கை வைக்க வேண்டும். நமக்கு எப்படிப்பட்ட சூழ்நிலை ஏற்பட்டாலும் அந்த இறைவன்மீதுள்ள நம்பிக்கையி லிருந்து கிஞ்சிற்றும் குறையாது முழு உறுதியுடன் செயல்படக் கூடிய தௌபீக்கை அல்லாஹ் நம் அனைவருக்கும் தந்தருள் புரிவானாக! ஆமீன்.

## 5. லூத் (அலை) அவர்களின் மனைவி

லூத் (அலை) அவர்கள் இப்ராஹீம் (அலை) அவர்களின் காலத்தில் வாழ்ந்தவர். அவர்களின் மனைவி அவர்களுக்கு கட்டுப்பட்டு நடக்கவில்லை.

அவர்களுக்கு நம்பிக்கை துரோகம் செய்தாள். மோசடி செய்தாள். அவர்கள் காலத்தில் வாழ்ந்த மக்கள் ஓரினச் சேர்க்கையில் ஈடுபட்டனர். அப்போது அவள் தம் கணவரைப்

பார்க்க யாராவது விருந்தாளி வந்தால் உடன் அம்மக்களிடம் சென்று இன்று எங்கள் வீட்டிற்கு விருந்தாளி வந்துள்ளார்கள் என கூறி விடுவாள். இப்படி துரோகம் செய்ததால் அம்மக்களுக்கு மிகக் கடினமாக தண்டனையை இறைவன் அளித்தபோது அவளையும் அதில் சேர்த்து அவர்களோடு அழித்தொழித்தான். அதைப்பற்றி இறைவன் திருமறையில்

قَالُوْا يٰلُوْطُ اِنَّا رُسُلُ رَبِّكَ لَنْ يَّصِلُوْٓا اِلَيْكَ فَاَسْرِ بِاَهْلِكَ بِقِطْعٍ مِّنَ الَّيْلِ وَلَا يَلْتَفِتْ مِنْكُمْ اَحَدٌ اِلَّا امْرَاَتَكَ ؕ اِنَّهٗ مُصِيْبُهَا مَآ اَصَابَهُمْ ؕ اِنَّ مَوْعِدَهُمُ الصُّبْحُ ؕ اَلَيْسَ الصُّبْحُ بِقَرِيْبٍ ﴿٨١﴾

லூத் நபியுடைய விருந்தினரான மலக்குகள் "லூத்தே! நிச்சயமாக நாங்கள் உம்முடைய ரப்பின் தூதுவர்கள். இவர்கள் உமக்கு தீங்கிழைக்க உம்மை வந்து சேரவே முடியாது. ஆகவே இன்று இரவின் ஒரு பகுதியில் உம்முடைய குடும்பத்தாருடன் நீர் இங்கிருந்து செல்வீராக! உம்மை நிராகரிக்கும் உம்முடைய மனைவியைத் தவிர. உங்களிலிருந்து எவரும் திரும்பிப் பார்க்ககூடாது. நிச்சயமாக அவர்களுடைய அழிவுக்கு வாக்களிக்கப்பட்ட நேரம் அதிகாலையாகும். அதிகாலை மிக சமீபமாக இல்லையா?" என்று அவர்கள் கூறினர்.

(சூரத்ஹூத்-11 வசனம்-81)

இதன்படி அல்லாஹ் அவ்வூரை தலைகீழாக ஆக்கி அதன்மேல் தொடர்ந்து சுடப்பட்ட கற்களை மழையாக

பொழிந்தோம் என கூறிக்காட்டி இதுபோன்று அநியாயம் செய்பவர்களுக்கு இதுபோன்ற நம்முடைய வேதனை மிகக் கடினமானதாக இருக்கும் என கூறிக் காட்டுகிறான்.

இங்கு நமக்கு படிப்பினை என்னவென்றால் மனைவி கணவனுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். லூத் (அலை) அவர்களின் மனைவி கட்டுப்பட்டு நடக்காததால் அவள் அநியாயக்காரர்களுடன் சேர்த்து அழித்தொழிக்கப்பட்டாள். இது போன்றே கணவனுடைய சொல்லுக்குக் கட்டுப்படாத கணவனுக்கு துரோகம் செய்யக்கூடிய மனைவிகளுக்கு இது போன்ற இறைவனுடைய மிகக்கடினமான தண்டனை அவர்களை இவ்வுலகிலேயே வந்தடையும் என்பதை இவ்வசனம் எச்சரிக்கை காட்டுகிறது. ஆகவே மனைவிகள் தம்முடைய கணவன்மார்களுக்கு கட்டுப்பட்டு நடக்கக்கூடியவர்களாகவும், கணவன்கள் மனைவிகளிடம் அன்பு செலுத்தக்கூடியவர்களாகவும் நடந்து ஈருலக பேற்றினை அடைந்துகொள்ள அல்லாஹ் நம் அனைவருக்கும் நல்லருள் பாலிப்பானாக! ஆமீன்.

# 6. யூசுப் (அலை) அவர்களின் எஜமாட்டி; பல வருடங்களுக்கு பின் அவர்களின் மனைவி

இப்ராஹீம் (அலை) அவர்களின் மகன் இஸ்ஹாக் (அலை). இஸ்ஹாக் (அலை) அவர்களின் மகன் யஃகூப் (அலை). யஃகூப் (அலை) அவர்களுக்கு 12 குழந்தைகள். அதில் யூசுப் (அலை) மிகவும் அழகுள்ளவர்களாக புத்திக் கூர்மையுள்ளவர்களாக சிறு வயதிலேயே இருந்ததால் யஃகூப் (அலை) அவர்களுக்கு மகன் யூசுப் மீது மிக அதிகமான பாசம் இருந்து வந்தது. இது மற்ற சகோதரர்களுக்கு பொறாமையை உண்டுபண்ணியது. மற்ற

சகோதரர்கள் காட்டிற்கு ஆடு மேய்க்கச் செல்லும்போது யூசுப் (அலை) அவர்களை மட்டும் தன்னிடத்திலேயே வைத்துக் கொள்வார்கள் யஃகூப் (அலை). இதனால் மற்ற ச்கோதரர்கள் பெரும் சூழ்ச்சி செய்து தந்தையிடத்தில் சாதுர்யமாகப் பேசி சகோதரர் யூசுபை அழைத்து சென்று ஒரு பாழடைந்த கிணற்றில் தள்ளிவிட்டு அவர்களின் ஆடையில் ஓநாயின் இரத்தத்தைத் தடவி தந்தையிடம் யூசுபை ஒரு ஓநாய் தின்றுவிட்டதாக கூறி சட்டையில் இரத்தக் கறையைக் காட்டினர். ஆனால் தந்தை அதை நம்பவில்லை. எமதிறைவன் எம்புதல்வரை மீட்டித் தருவான் என உறுதியுடன் கூறினார்கள். அதன்படி அல்லாஹ் மீட்டுத் தந்தான். யூசுப் (அலை) அவர்களை கிணற்றிலிருந்து ஒரு வியாபாரக் கூட்டம் தூக்கி சந்தையில் விற்று விட்டது. அவர்களை ஒரு அரசனின் அமைச்சர் விலைக்கு வாங்கி தம் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறார். அவர் தம் மனைவியிடம் சென்று கூறியதை இறைவன் விபரிக்கிறான்.

وَقَالَ الَّذِى اشْتَرٰٮهُ مِنْ مِّصْرَ لِامْرَاَتِهٖۤ اَكْرِمِىْ مَثْوٰٮهُ عَسٰۤى اَنْ يَّـنْفَعَنَاۤ اَوْ نَـتَّخِذَهٗ وَلَدًا ؕ

எகிப்தில் யூசுபை விலைகொடுத்து வாங்கியவர் 'தம் மனைவியிடம் இவர் நம்மிடம் தங்குவதை சங்கையாக்கி வைத்துக்கொள். இவர் நமக்கு பயன்தருபவராக இருக்ககக்கூடும். அல்லது இவரை நாம் வளர்ப்பு மகனாக ஆக்கிக் கொள்ளலாம் என்று கூறினார்.

சூரத்து யூசுப்-வசனம்: 21

இங்கு நமக்கு என்ன படிப்பினை என்றால் அந்த எஜமாட்டி அம்மையார் யூசுப் (அலை) அவர்களிடம் வேலை பளுவை சுமத்தவில்லை. துன்பம் கொடுக்கவில்லை. யூசுப் (அலை) அவர்களின் அழகில் மயங்கி அவர்களை தன்னிச்சைக்கு

அழைத்தார். ஆனால் யூசுப் (அலை) மறுத்துவிட்டார்கள். தவறு நிகழ்ந்திடாமல் அல்லாஹ்வும் பாதுகாப்புக் கொடுத்தான். இதைத் தவிர எந்த வகையிலும் அவர்களுக்கு துன்பம் விளைவிக்கவில்லை. இதுபோல் நம் காலத்தில் அடிமைகள் இல்லை என்றாலும் வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஆகவே நாம் நம்முடைய வேலைக்காரர்களை கண்ணியத்தோடும், அன்பாகவும் நடத்த வேண்டும் என்பதும், அவர்களால் முடியாத வேலைகளைச் செய்யச் சொல்லி கஷ்டப்படுத்தக்கூடாது என்பதும் அவர்களுக்கு நம்மால் முடிந்த அளவுக்கு நல்லதையே செய்ய வேண்டும் என்பதும் அதிகாரத்தை பயன்படுத்தாமல் அன்போடு நடந்துக்கொள்ள வேண்டும் என்பதும் இந்த ஆயத்திலிருந்து நமக்கு தெளிவாக விளங்குகிறது. யூசுப் (அலை) அடிமையாக இருந்தும் கண்ணியத்தோடு நடத்தினார் கள் என்பது தெளிவாகிறது. ஜெயிலிலே அடைத்தார்களே? என்றால் அந்த வரலாறு வேறு. அதைப்பற்றி இங்கு குறிப்பிடப் படவில்லை. விளக்கம் தேவைப்பட்டவர்களை ஆசிரியரையோ, அல்லது பெரும் அறிஞர்களையோ கேட்டு விளக்கம் பெற்றுக் கொள்ளவும். ஆகவே நாமும் நம்முடைய வேலையாட் களிடத்தில் அன்போடும், பாசத்தோடும், நேசத்தோடும் நடந்து கொள்வதற்கு அல்லாஹ் நம் அனைவருக்கும் நல்லருள் புரிவானாக! ஆமீன்.

# 7. ஈஸா (அலை) அவர்களின் தாய் மர்யம் (அலை)

ஹன்னா அம்மையார் தன் நேர்ச்சையை நிறைவேற்றுவ தற்காக தன் குழந்தை மர்யமை பைத்துல் முகத்தஸ் வாசலிலே விட்டுவிட்டு வந்து விடுகிறார்கள். அப்போது மர்யம் (அலை)

அவர்களை வளர்க்கும் பொறுப்பை ஜகரிய்யா (அலை) அவர்களிடம் அல்லாஹ் ஒப்படைத்தான். குழந்தை சீரும் சிறப்போடும் வளர்ந்து வருகிறது. வாலிப பருவத்தை அடைந்தபோது அல்லாஹ் பரிசுத்தமான மர்யம் (அலை) அவர்கள் மூலம் ஆணின் துணையின்றி ஒரு குழந்தையை வெளியாக்க நாடினான். அதுதான் ஈஸா (அலை) அவர்கள். வாலிப பருவத்தில் இருந்த மர்யம் ஒரு நாள் குளிப்பதற்காக ஒரு ஒதுக்குப்புறமாக செல்கிறார்கள். அப்போது அங்கே திடீரென ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ஒரு அழகான வாலிபருடைய உருவத்தில் தோன்றுகிறார்கள். இதைப் பார்த்த மர்யம் திடுக்கிட்டு விடுகிறார்கள். பயந்து விடுகிறார்கள். உடனே கூறுகிறார்கள். அதை இறைவன் திருமறையில் குறிப்பிட்டுக் காட்டுகிறான்.

قَالَتْ إِنِّىٓ أَعُوذُ بِٱلرَّحْمَٰنِ مِنكَ إِن كُنتَ تَقِيًّا ﴿١٨﴾

ஜிப்ரயீலைக் கண்டவுடன் நிச்சயமாக நான் உம்மைவிட்டும் அர்ரஹ்மானிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீர் பயபக்தி யுள்ளவராக இருந்தால் இங்கிருந்து சென்று விடும் என்று கூறினார்.

சூரா மர்யம்-19 வசனம்: 18

அதற்கு ஜிப்ரயீல் (அலை) நான் இறைவனின் தூதர்; உமக்கு ஈஸா என்ற மகன் பிறப்பான் என்ற செய்தியை சொல்ல வந்தேன் என கூற "அது எப்படி? என்னை யாரும் தீண்டவு மில்லை. நான் நடத்தைக் கெட்டவளும் அல்ல. பிறகு எப்படி குழந்தை பிறக்கும்?" என கேட்க இது இறைவனின் நாட்டம்; அவனால் எதுவும் முடியாததல்ல என கூறி சென்று விட்டார்கள். அதன்படி குழந்தையைப் பெற்றெடுத்தார்கள்.

இங்கு நமக்கு படிப்பினை என்னவென்றால் வயதுவந்த மங்கையாக இருக்கும் தான் ஒரு கற்புக்கரசியாக இருந்த

காரணத்தால் வந்தவர் மலக்காக இருப்பினும் தன் புரியாத காரணத்தால் ஒரு பத்தினிக்கு ஏற்படுகிற பத்தியமான நிலை இங்கும் அவர்களுக்கு ஏற்பட்டது. அதன் காரணமாக அவர்களைப் பற்றி அல்லாஹ் மிகவும் உயர்த்திப் போற்றி திருமறையில் கூறிக் காட்டுகிறான். இதுபோன்று எந்த ஒரு ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் தன் கற்பைப் பாதுகாத்து உத்தமனாக உத்தமியாக வாழ வேண்டும் என்பதை இந்த வசனம் நம்மவர்களுக்கு உபதேசிக்கின்றது. ஆகவே நாம் எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் நம்முடைய கற்பை பாதுகாத்து கற்புக்கரசர்களாக கற்புக்கரசிகளாக வாழ்வதற்கும் அதன் மூலம் இறைவனின் உன்னத பேற்றினை பெறுவதற்கும் அல்லாஹ் நம் அனைவருக்கும் நல்ல :தௌபீக் செய்வானாக! ஆமீன்!!

## 8. ஜகரிய்யா (அலை) அவர்களின் மனைவி ஈஷாஉ (அலை)

ஜகரிய்யா (அலை) அவர்கள் மர்யம் (அலை) அவர்களை வளர்த்து வந்தார்கள். மர்யம் (அலை) வாலிபப் பருவத்தை அடைந்தபோது வீட்டினருகில் உயரமான மாடம் போன்று ஒரு இடத்தைத் தயார் செய்து அங்கு தங்க வைத்தார்கள். ஏணியின் மீது ஏறியே அம்மாடத்திற்கு செல்லவேண்டியிருந்தது. அதன் மீதேறி ஒவ்வொரு நாளும் இரண்டு ரொட்டியும், உப்பும், நீரும் வைத்துவிட்டு வந்து விடுவார்கள். ஜகரிய்யா (அலை) அவர்கள் திரும்பி வரும்போது அம்மாடியை பூட்டி விடுவார்கள். மர்யம் (அலை) அதைகொண்டே நோன்பு வைத்துக் கொண்டும் நோன்பு திறந்து கொண்டும் வந்தார்கள். ஜகரிய்யா (அலை) மர்யம் (அலை) அவர்களுக்கு உணவு கொண்டு போகும் போதெல்லாம் மர்யம் (அலை) அருகில் கனிவர்க்கங்கள்

கூடையில் இருக்கும். வெயில் காலத்தில் கிடைக்கும் பழங்கள் குளிர்காலத்திலும் குளிர் காலத்தில் கிடைக்கும் பழங்கள் வெயில் காலத்திலும் அவர்களுக்குக் கிடைத்தது.

இதைப் பார்த்து ஆச்சரியமுற்ற ஜகரிய்யா (அலை) இது எப்படிக் கிடைத்தது என கேட்க இது அல்லாஹ்விடமிருந்துதான் வருகின்றது. அல்லாஹ் தான் நாடியவர்களுக்கு அளவின்றி உணவளிக்கிறான் என கூறினார்கள். திடீரென ஜகரிய்யா (அலை) அவர்களுக்கு ஒரு யோசனை தோன்றியது. வெயில் காலத்தில் கிடைக்கும் பழங்களை குளிர்காலத்திலும், குளிர் காலத்தில் கிடைக்கும் பழங்களை வெயில் காலத்திலும் மர்யமுக்கு வழங்கும் அல்லாஹ்வுக்கு நமது வயோதிக வயதில் நமக்கு ஒரு குழந்தையைத் தருவதற்கு முடியாதா? என தனக்குத்தானே கேள்வி கேட்டுக் கொண்டவர்களாக இறைவனிடம் தன்னுடைய இயலாமை அனைத்தையும் முறையிட்டு துஆ செய்தார்கள். மிகவும் தாழ்ந்த குரலில்

إِذْ نَادَىٰ رَبَّهُۥ نِدَآءً خَفِيًّا ۝٣ قَالَ رَبِّ إِنِّى وَهَنَ
ٱلْعَظْمُ مِنِّى وَٱشْتَعَلَ ٱلرَّأْسُ شَيْبًا وَلَمْ أَكُنۢ
بِدُعَآئِكَ رَبِّ شَقِيًّا ۝٤ وَإِنِّى خِفْتُ ٱلْمَوَٰلِىَ مِن
وَرَآءِى وَكَانَتِ ٱمْرَأَتِى عَاقِرًا فَهَبْ لِى مِن لَّدُنكَ
وَلِيًّا ۝٥ يَرِثُنِى وَيَرِثُ مِنْ ءَالِ يَعْقُوبَ ۖ وَٱجْعَلْهُ رَبِّ
رَضِيًّا ۝٦

என்னுடைய ரப்பே! நிச்சயமாக நான் என்னிலுள்ள எலும்புகள் பலவீனமடைந்து விட்டன. என்னுடைய தலையும் நரையினால் வெண்மையாக இலங்குகிறது. என்னுடைய ரப்பே! உன்னிடத்தில் துஆச் செய்வது கொண்டு இதுவரை பாக்கியமில்லாதவனாக நான் ஆகவில்லை என்று கூறினார்.

நிச்சயமாக நான் எனக்குப் பின் என் உறவினர்களை நான் பயப்படுகிறேன். என்னுடைய மனைவியோ மலடாக ஆகி விட்டாள். எனவே உன்னிடமிருந்து ஒரு வாரிசை நீ எனக்கு கொடையளிப்பாயாக! என்றும், எனக்கு அவர் வாரிசாகவும், யஃகூப்உடைய சந்ததிகளுக்கு வாரிசாகவும் ஆகிவிடுவார். மேலும் எனது ரப்பே! அவரை உனக்குப் பொருத்தமானவ ராகவும் ஆக்கியருள்வாயாக! என்று கூறினார். (சூரத்து மர்யம்-19 வசனம்: 4, 5, 6

அதற்கு அல்லாஹ் பதில் கூறுகிறான்.

فَاسْتَجَبْنَا لَهٗ ۫ وَوَهَبْنَا لَهٗ يَحْيٰى وَاَصْلَحْنَا لَهٗ
زَوْجَهٗ ؕ اِنَّهُمْ كَانُوْا يُسٰرِعُوْنَ فِى الْخَيْرٰتِ وَ
يَدْعُوْنَنَا رَغَبًا وَّرَهَبًا ؕ وَكَانُوْا لَنَا خٰشِعِيْنَ ۝

அவருக்காக அவர் துஆவை நாம் ஏற்றுக் கொண்டோம். அவருக்கு மகனாக யஹ்யாவை அன்பளிப்பாக நாம் கொடுத்தோம். இன்னும் அவருக்கு அவருடைய மனைவியை பிள்ளைப்பேறுக்குத் தகுதியாக்கி வைத்தோம். நிச்சயமாக நபிமார்களாகிய அவர்கள் நன்மைகளில் விரைந்து செல்பவர் களாகவும், நம் அருளில் ஆசை கொண்டும், நம் தண்டனையை பயந்தும் நம்மை பிரார்த்தித்து அழைப்பவராகவும் இருந்தனர்.

இன்னும் நம்மிடம் உள்ளச்சம் கொண்டோராகவும் இருந்தனர்.
சூரத்துல் அன்பியா-21 வசனம்: 90

இங்கு துஆ செய்யும் முறையை அல்லாஹ் நமக்கு கற்றுத் தருகிறான். மிகவும் பணிவோடு தன் இயலாமையை வெளிப்படுத்தி இறைவனை மிகவும் புகழ்ந்துதான் துஆ செய்ய வேண்டும். நாம் எதை இறைவனிடம் கேட்டாலும் நிச்சயமாகத் தருவான் என்ற உறுதியோடு கேட்க வேண்டும். கேட்ட பிறகு தரும்வரை பொறுமையாகவும் கிடைக்கும் என்ற உறுதியோடும் இருக்க வேண்டும். நாம் கேட்கக்கூடியது கிடைப்பது நடைமுறைக்கு சாத்தியமில்லாது இருந்தாலும் நாம் அவனுக்கு பயந்து அவனுக்கு பொருத்தமான முறையில் நடந்தோமேயானால் கிடைக்கும் என்ற உறுதியோடு கெஞ்சிக் கேட்போமே யானால் நிச்சயமாக அல்லாஹ் தருவான். நம்மில் எத்தனையோ பேர் குழந்தை பாக்கியம் இல்லாமலும் இருக்கின்றனர். அவர்கள் ஐந்து நேரமும் விடாமல் தொழுது பாவமான காரியங்களை விட்டும் தவிர்ந்திருந்து என்னேரமும் உருக்கமாக கெஞ்சி, அழுது இறைவனிடம் குழந்தை பாக்கியம் கேட்கும்போது நிச்சயமாக அல்லாஹ் தருவான் என்பதைதான் இந்த ஆயத்து நமக்கு தெளிவுபடுத்திக் காட்டுகின்றது. மலடாக குழந்தை பெற் றெடுக்க முடியாதவராக இருந்த ஜகரிய்யா (அலை) அவர்களின் மனைவியை குழந்தை பெற்றெடுக்க தகுதியான வராக அல்லாஹ் ஆக்கினான். அதுபோல் நம்மில் யாரும் மலடாக இருந்தாலும் அல்லாஹ் தருவான் என்ற உறுதியில் அவனின் கட்டளைகளை சரிவர நிறைவேற்றி வருவதுடன் அவனிடம் இறைஞ்சிக் கொண்டே இருந்தால் கிடைத்துவிடும் என்பதும் இந்த ஆயதத்திலிருந்து விளங்குகிறது மேலும் குழந்தை பாக்கியம் இல்லாதவர்கள் இதற்கு முன்னால கூறப்பட்ட ஆயத்துக்களை

அதிகமாக ஓதி வருவதால் அந்த பாக்கியம் கிடைக்கும். ஆனால், ஒரு நிபந்தனை; இறைகட்டளைகளை சரியாக நிறைவேற்றிவர வேண்டும். அவனின் விலக்கல்களை தவிர்ந்து கொள்ள வேண்டும். அதாவது அவனால் தடுக்கப்பட்ட காரியங்களை விட்டும் தவிர்ந்து கொள்ள வேண்டும். ஆகவே, அல்லாஹ்வின் கட்டளைகளைப் பின்பற்றி வாழ்வதற்கும், நம்முடைய எந்தத் தேவையும் அவனிடம் உறுதியுடன் கெஞ்சி கேட்டுப் பெறக்கூடிய நன் மக்களாக நம் அனைவரையும் அல்லாஹ் ஜல்லஷஃனுஹு த்ஆலா ஆக்கி அருள்புரிவானாக! ஆமீன்.

## 9. யமன் நாட்டில் ஸபா என்ற பட்டினத்தை ஆண்ட அரசி பல்கீஸ்; பிறகு சுலைமான் (அலை) அவர்களின் மனைவி

தாவூத் (அலை) அவர்களின் மகனாக சுலைமான் (அலை) அவர்கள் பிறந்தார்கள். சிறுவயதிலேயே சிறந்த அறிவாளியாகத் திகழ்ந்தார்கள். அவர்களின் அறிவு தீர்ச்சிக்கு ஒரு உதாரணம்

இரண்டு மனிதரில் ஒருவர் இன்னொருவரை சுட்டிக்காட்டி என் வயலில் இவர் ஆடுகள் மேய்ந்து விட்டது. தீர்ப்பளியுங்கள் என தாவூது (அலை)அவர்களிடம் கூற உடனே ஆடுகளை வயல் உடையவரிடம் கொடுத்துவிடு என தீர்ப்பளித்தார்கள். அப்போது சுலைமான் (அலை) சிறுபிள்ளை என்றாலும் ''தந்தையே! தாங்கள் விரும்பினால் இருவருக்கும் பிரயோஜனமான ஒரு தீர்ப்பை நான் அளிக்கிறேன்'' என கூற சரி கூறு என கூறினார்கள். அப்போது சுலைமான் (அலை) அவர்கள் அந்த ஆட்டுக்காரனைப் பார்த்து உன் ஆடுகளை வயல்காரரிடம் கொடுத்துவிடு. நீ வயலை உழுது நீர்ப் பாய்ச்சி பயிரிடு. ஆடுகள் தின்னும்போது எந்தளவு வளர்ந்திருந்ததோ அதே அளவு நீ

வளர்த்துவா. அதுவரை ஆடுகளை அவர் வைத்து கொள்ளட்டும். அப்போது அதிலிருந்து பால் கறந்து கொள்ளவும். அவரிடம் ஆடுகள் இருக்கும்போது குட்டிகள் போட்டால் அந்த குட்டி அவருக்கு சொந்தம். குறிப்பிட்ட அளவு பயிர் வளர்ந்ததும் அதை அவரிடம் ஒப்படைத்துவிட்டு உன் ஆடுகளை நீ ஓட்டி சென்று விடு என இருவருக்கும் சமமாக பாதிப்பில்லாமல் தீர்ப்பளித் தார்கள். அந்த அளவு கூர்மையான நுண்ணிய அறிவு பெற்றுத் திகழ்ந்தார்கள்.

அவர்களுக்கு அல்லாஹ் எல்லா ஜீவராசிகளின் பாஷை யையும் கற்றுக் கொடுத்திருந்தான். எல்லா ஜீவராசிகளும் அவர்களின் ஆணைக்கு செவிசாய்த்தன. உலகத்தையே ஆட்சி செய்யும் அளவுக்கு மிகப்பெரிய அரசராக ஆக்கினான். அவர்களின் ஆட்சிக் காலத்தில் ஒரு நாள் அவர்களின் கீழ் பணியாற்றக்கூடிய ஹுத்ஹுத் என்ற பறவையைக் காண வில்லை. அது தண்ணீர் எங்கு இருக்கிறது என்பதை கண்டு பிடித்து அறிவிக்கும். அவர்களுக்கோ தொழுவதற்கும், மற்ற தேவைகளுக்கும் தண்ணீர் தேவைப்பட்டது. அவர்கள் சென்றிருந்த பகுதியில் தண்ணீர் எங்குள்ளது என்பது தெரிய வில்லை. எனவே அந்த பறவையைத் தேடினார்கள். அதை காணவில்லை. அவர்களுக்கோ மிகப்பெரும் கோபம் ஏற்பட்டது. அது சென்றிருந்த சரியான காரணத்தை சொல்ல வில்லையால் அதை அறுத்தெறிந்து விடுவேன். அல்லது கடினமான முறையில் தண்டிப்பேன் என சபதம் செய்து கொண்டார்கள். சிறிது நேரத்தில் ஹுத்ஹுத் பறவை திரும்பி வந்தது. எங்கே சென்றாய் என கேட்க நான் சபா என்ற பட்டணத்திற்கு சென்றிருந்தேன். அதை ஒரு பெண்-அரசி- ஆண்டு கொண்டிருக்கிறாள். அவள் சூரியனை வணங்கக் கூடியவளாக இருக்கிறாள். அவளுக்கு மிகப்பெரும் சிம்மாசனம் உள்ளது. அவளுக்கு ஏராளமான படைபட்டாளங்கள்

உள்ளது என கூற உடனே சுலைமான் அந்த அரசிக்கு ஒரு கடிதம் எழுதுகிறார்கள். எப்படியெனில் நீ பெருமையடிக்காதே! நீ இஸ்லாமாகி என்னை சந்தி என எழுதுகிறார்கள். கடிதத்தைப் பெற்றுக் கொண்ட அரசி தன் அமைச்சர்களிடம் ஆலோசனை கலக்கிறாள். இதைப்பற்றி திருமறை விவரிக்கின்றது.

قَالَتْ يَٰٓأَيُّهَا ٱلْمَلَؤُا۟ إِنِّىٓ أُلْقِىَ إِلَىَّ كِتَٰبٌ
كَرِيمٌ ﴿٢٩﴾ إِنَّهُۥ مِن سُلَيْمَٰنَ وَإِنَّهُۥ بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ
ٱلرَّحِيمِ ﴿٣٠﴾ أَلَّا تَعْلُوا۟ عَلَىَّ وَأْتُونِى مُسْلِمِينَ ﴿٣١﴾ قَالَتْ
يَٰٓأَيُّهَا ٱلْمَلَؤُا۟ أَفْتُونِى فِىٓ أَمْرِى مَا كُنتُ قَاطِعَةً
أَمْرًا حَتَّىٰ تَشْهَدُونِ ﴿٣٢﴾

பிரமுகர்களே! நிச்சயமாக சங்கைக்குரிய ஒரு கடிதம் என் பக்கம் போடப்பட்டுள்ளது. என ஸபா நாட்டு அரசியான அவள் கூறினாள். நிச்சயமாக இது ஸுலைமானிடமிருநது வந்துள்ளது. இன்னும் இது அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் துவங்குகிறது. எனக்கெதிராக நீங்கள் பெருமையடிக்க வேண்டாம். நீங்கள் முஸ்லிம்களாக அல்லாஹ்வுக்கு வழிபட்டவர்களாக என்னிடம் வாருங்கள் என்று எழுதப் பட்டுள்ளது. எனது பிரமுகர்களே! என்னுடைய இவ்விஷயத்தில் யோசனை சொல்லுங்கள். நீங்கள் என் முனனிலையில் எனக்கு ஆலோசனை சொல்லும்வரை எந்த முடிவும் நான் எடுக்க மாட்டேன் என கூறினாள்.

சூரத்துன்னம்ல்-27வது சூரா வசனம்: 29, 30, 31, 32

இங்கு அரசியார் பிரஜைகளிடம் ஆலோசனை கேட்கிறார். ஏன்? அவரே இதற்கு ஒரு முடிவு கூறினால் அதை அனைவரும் ஏற்றுக்கொள்ளத்தான் செய்வர். என்றாலும் அவர்களிடத்தில் ஆலோசனை செய்யும்போது ஒருமித்த கருத்து ஏற்படுவதுடன் அனைவரும் ஒற்றுமையாக செயல்பட வழிவகுக்கிறது. இதுபோல் நாமும் எவ்வளவு பெரிய அறிவாளியாக இருந்தாலும் நம் இஷ்டத்திற்கு நாமாக ஒரு விஷயத்தில் முடிவு எடுக்கக்கூடாது என்பதை இவ்வசனம் நம்மவர்களுக்கு தெளிவாக உணர்த்திக் காட்டுகிறது.

பெருமானார் (ஸல்) தன் குடும்ப விஷயங்களைக்கூட சிறிய சிறிய விஷயங்களைக்கூட தன் ஸஹாபாக்களிடம் ஆலோசனை கலந்து கொள்வார்கள்.

ஆகவே நாம் எந்த ஒரு விஷயமாக இருந்தாலும் உடனே முடிவு எடுக்க கூடாது. நம்மைச் சேர்ந்தவர்களிடம் ஒரு ஆலோசனை செய்துதான் முடிவு எடுக்க வேண்டும். சிறிய விஷயமாக இருந்தாலும் நம்மைச் சேர்ந்தவர்களிடம் குறைந்தது கணவன் மனைவிடம் ஆலோசனை கேட்டு அதில் எது சரியாக இருக்கிறதோ அதனபடி செயல்பட வேண்டும். ஏன் பெருமானார் (ஸல்) அவர்கள்கூட ஒரு தடவை மனைவியின் ஆலோசனைபடி நடந்தார்கள்.

மக்காவிலிருந்து மதீனாவிற்கு ஹிஜ்ரத் சென்றதற்கு பின் ஹிஜ்ரீ 6-ம் ஆண்டு 1400 ஸஹாபாக்களுடன் உம்ரா செய்வதற்காக மக்கா நோக்கி செல்ல ஹுதைபிய்யா என்ற இடத்தில் தடுத்து நிறுத்தப்படுகிறார்கள். அவர்கள் அனைவரும்

இங்கிருந்து இஹ்ராமுடன் செல்கிறார்கள். தடுத்து நிறுத்தப்பட்டவுடன் ஸஹாபாக்கள் எதிர்த்துப் போரிடலாம் என கூற பெருமானார் (ஸல் ) அதை விரும்பவில்லை . அடுத்த வருடம் வந்து உம்ரா செய்யலாம் என கூற அதை ஸஹாபாக்கள் ஏற்க தயங்குகிறார்கள். இப்போது என்ன செய்வது என்று பெருமானார் (ஸல்) யோசித்து கொண்டிருக்க,

அவர்களின் மனைவி ஜைனப்(ரலி) அவர்கள் ஏன் தயங்குகிறீர்கள். முதலில் நீங்கள் உங்களுடைய இஹ்ராமை துறந்து தலைமுடியை நீக்கிக் கொள்ளுங்கள் உடன் உங்கள் தோழர்களும் அவ்வாறு செய்வார்கள் என கூற அதன்படி நீக்கிக் கொள்ள உடனே மற்ற ஸஹாபாக்களும் அவ்வாறே செய்து கொண்டனர். எனவே சில நேரங்களில்மனைவியுடன் யோசனை சரியாக இருக்கும் பட்சத்தில் அவர்களுடைய யோசனையையும் ஏற்று கொள்ள வேண்டும். ஆகவே எந்த ஒரு காரியமாக இருந்தாலும் நாம் நம் இஷ்டத்திற்கு முடிவு செய்ய கூடாது . நம்மை சேர்ந்தவர்களுடன் ஆலோசனை செய்து கொள்ள வேண்டும் என்பதை அல்லாஹ் திருமறையில்

وَشَاوِرْهُمْ فِي الْأَمْرِ ۖ فَإِذَا عَزَمْتَ فَتَوَكَّلْ

عَلَى اللَّهِ ۚ إِنَّ اللَّهَ يُحِبُّ الْمُتَوَكِّلِينَ ﴿١٥٩﴾

எந்த ஒரு விஷயத்திலும் நீ அவர்களுடன் ஆலோசனை கலந்து கொள். அப்படி ஆலோசனை கலந்து ஒருமித்த கருத்து ஏற்பட்டு விட்டால் அல்லாஹ்வின் மீது அதை நிறைவேற்றி தருவான் என்று நம்பிக்கை வைத்து செயல்படு என்பதாக கூறிக் காட்டுகிறான்.

ஆகவே நாம் எந்த ஒரு காரியமாக இருந்தாலும் அதை செய்வதற்கு முன் நம்மை சேர்ந்தவர்களிடம் ஆலோசனை கலப்பதற்கும், அதை நல்லமுறையில் ஒருமித்த கருத்துடன் செயல்படுத்துவதற்கும் அல்லாஹ் நம் அனைவருக்கும் நல்ல தௌபீக் செய்வானாக! ஆமீன்!

## 10. மூஸா (அலை) அவர்களின் தாய் யூகா நிதீ:-

மூஸா (அலை ) அவர்களின் காலத்தில் எகிப்து தேசத்தை பிர்அவ்ன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் தன்னையே இறைவன் என பிரகடனப்படுத்தினான். மக்கள் அனைவரும் தன்னை இறைவன் என்று வணங்கவேண்டும் எனஆணை பிறப்பித்தான். அவன் ஒருநாள் பயங்கர கனவு ஒன்று கண்டான் அதற்கு விளக்கம் தன் அமைச்சர்களிடம் கேட்ட போது இந்நாட்டில் ஒரு அற்புத குழந்தை பிறக்கப் போகிறது. அந்த குழந்தை பெரிதானதும் உன் ஆட்சிக்கு ஆபத்து என கூற அப்படியா?அந்த குழந்தை பிறந்து விட்டதா? என கேட்க இல்லை. இன்னும் அது தாய் வயிற்றில் தரிக்கவில்லை. எனகூற அப்படி அது தரிக்காமலே செய்து விடுகிறேன் என கூறி அது தரிக்கும் நாள் எந்த நாள் என்பதை அறிந்து அன்றைய இரவு ஆண்களும் பெண்களும், கணவன்களும் மனைவிகளும் ஒன்று சேராமல் ஆண்களைத் தனியாக பெண்களை தனியாகப் பிரித்து தனித்தனி இடத்தில் தங்க வைத்தான். ஆண்களுக்கு ஒரு ஆணை காவலாளியாகவும்,பெண்களுக்கு ஒரு பெண்ணைக் காவலாளியாகவும் ஏற்படுத்தினான். ஆனால் இறைவனின் நாட்டம் அந்த காவலாளிகள் இருவரும் கணவன் மனைவி காவல் காத்து சோர்ந்து போய் இருவரும் சந்தித்து உரையாடிச்

கொண்டிருக்கும் போது உடலுறவு கொண்டு விடுகிறார்கள். எந்தக் குழந்தை உருவாகாமல் இருக்க பிரித்து வைத்தானோ அந்த குழந்தை இவர்கள் மூலமாக உருவாகி விடுகிறது. பொழுது விடிந்ததும் அந்தக் குழந்தை உருவாகி விட்டது என்பதை அறிகிறான். எனவே ஆண்குழந்தை எங்கு பிறந்தாலும் உடன் வெட்டி எறிய உத்தரவிடுகிறான். இந்த நேரத்தில் தான் யூகாநிதி என்ற அந்தப்பெண் மூஸாவை பெற்றெடுக்கிறார்கள். நம் அரசனுக்கு தெரிந்தால் கொன்று விடுவானே என்ன செய்வது என்று அறியாது திகைத்து கொண்டிருக்கும் போதுதான் இறை ஆணை பிறக்கிறது.

وَاَوْحَيْنَآ اِلٰٓى اُمِّ مُوْسٰٓى اَنْ اَرْضِعِيْهِ ۚ فَاِذَا خِفْتِ عَلَيْهِ فَاَلْقِيْهِ فِى الْيَمِّ وَلَا تَخَافِىْ وَلَا تَحْزَنِىْ ۚ اِنَّا رَآدُّوْهُ اِلَيْكِ وَجَاعِلُوْهُ مِنَ الْمُرْسَلِيْنَ

இன்னும் மூஸாவுடைய தாய்க்கு நாம் வஹீ அறிவித்தோம். உன்னுடைய குழந்தைக்கு நீ பாலூட்டுவாயாக! பிறகு அக்குழந்தை பற்றி நீ பயந்தால் அதனை நீ கடலில் போட்டு விடு. தண்ணீரில் மூழ்கிவிடுமே என நீ பயப்படவேண்டாம். அதை பிரிந்திருப்பதைப் பற்றி கவலையும் பட வேண்டாம். நிச்சயமாக அவரை உன் பக்கமே திருப்புவோம் இன்னும் அவரை நம்முடைய தூதர்களில் ஒருவராக ஆக்குவோம். சூரத்துல்கஸஸ்-28-வது சூரா -வசனம்-8என்று அறிவித்தான்.

இங்கு அல்லாஹ் குழந்தையை கடலில் விட்டுவிடும் படியும். அதை பற்றிக் கவலைப்படாதே நாம்அதைக் காப்பாற்று

வோம் என்றும் கூறினான். அப்பொழுது அந்த தாய் ஒரு பெட்டியில் வைத்து குழந்தையை கடலிலே விட்டுவிட்டார்கள்: அதை அல்லாஹ் காப்பாற்றினான். அதுதான் மூஸா(அலை) அவர்கள். இங்கு அந்த தாயின் நம்பிக்கையை நாம் கவனிக்க வேண்டும். அல்லாஹ் நம் குழந்தையை காப்பாற்றுவான் மீண்டும் நம்மிடம் ஒப்படைப்பான் என்ற உறுதியான நம்பிக்கை அவன் மீது வைத்திருந்ததால் குழந்தையைக் கடலிலே விட்டார்கள். இல்லையானால் எப்படி கடலிலே உயிருடன் பெற்ற பிள்ளையை விட்டுவிட மனது வரும். அப்படியானால் அவர்களுக்கு அல்லாஹ் மீது இருந்த நம்பிக்கையை கவனிக்க வேண்டும். இது போல் தான் நாமும் அந்த இறைவன் மீது நம்பிக்கை வைக்க வேண்டும். எப்படிப்பட்ட ஆபத்து ஏற்பட்டாலும் சரி. அல்லாஹ் அதிலிருந்து எப்படியும் நம்மை காப்பற்றுவான் என்ற உறுதியுடன் அதை எதிர்த்து செயல் பட்டால் நிச்சயம் அதிலிருந்து அல்லாஹ் காப்பாற்றுவான். அதில் எந்தவித சந்தேகமுமில்லை என்பதை இந்த ஆயத்து நமக்கு தெளிவுபடுத்திக் காட்டுகிறது. மேலும் எப்பேற்பட்ட கஷ்டம் ஏற்பட்டாலும் அதை விட்டும் சீக்கிரம் அல்லாஹ் விடுதலையாக்குவான் என சகிப்புத் தன்மையுடன் பொறுத்துக்கொண்டால் வெகு சீக்கிரத்தில் அந்த கஷ்டத்திலிருந்து நம்மை இறைவன் பாதுகாப்பான் என்பதையும் இந்த ஆயத்து நமக்கு தெளிவு படுத்திக் காட்டுகிறது. ஆகவே நாமஅந்த இறைவன் மீது எல்லா சூழ்நிலையிலும் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்து செயல்படக்கூடிய நல்லடியார்களாக அல்லாஹ் நம் அனைவரையும் ஆக்கி அருள் புரிவானாக! ஆமீன் !!

# 11. பிர்அவ்னின் மனைவி ஆஸியா அம்மையார் (அலை)

ஆஸியா அம்மையார் மூஸா (அலை) அவர்களைக் கொண்டு ஈமான் கொண்டவர்களாக இருக்கிறார்கள். பிர்அவ்ன். திருமணம் செய்ததிலிருந்து ஒரு நாள் கூட அவர்களிடம் இன்பம் அனுபவிக்கவில்லை. காரணம் அல்லாஹ் அவர்களிடம் சேரமுடியாமல் ஆக்கி அவர்களுக்குப் பாதுகாப்பை அருளினான். ஏனெனில் பிர்அவ்ன் மிகப்பெரிய இறைசாபத்திற்கு உள்ளானவன். ஏனெனில் தன்னையே இறைவன் என பிரகடனப் படுத்தினான். இந்த அம்மையாரோ இறைவிசுவாசி. எனவே இவர்களைப் பாதுகாத்தான். எப்படியெனில் பிர்அவ்ன் இவர்களை நெருங்கும் போதெல்லாம் அவனுக்கு ஆண்மை குறைந்து விடும். ஆண்மையற்றவனைப் போல் ஆகிவிடுவான். இப்படியே கடைசிவரை அந்த அம்மையாரைக் காப்பாற்றி அந்த அம்மையாரை சுவர்க்க வாசியாக அல்லாஹ் அங்கீகரித்தான்.

மூஸா (அலை) அவர்களின் தாயார் குழந்தையான மூஸாவை ஒரு பெட்டியில் வைத்து நைல்நதியில் விட்டு விடுகிறார்கள். அந்த நதியின் ஒருபகுதி பிர்அவ்னின் வீட்டு பக்கமாக ஓடிக் கொண்டிருக்கிறது. அந்த பெட்டி பிர்அவ்னின் வீட்டு பக்கமாக ஓடும் ஆற்றில் மிதந்து அவனின் வீட்டின் ஓரம் ஒதுங்கியது. அப்போது அதை ஆஸியா அம்மையார் எடுக்கிறார்கள். அதை திறந்து பார்க்கும்போது அழகான குழந்தை. அதைக் கணவரிடம் காட்டி இதை நாம் வளர்த்துக் கொள்வோம் என கூற சரி என சம்மதிக்கிறான் பிர்அவ்னும். குழந்தை நல்லவிதமாக வளர்ந்து வருகிறது. இதை அல்லாஹ் திருமறையில்

وَقَالَتِ امْرَاَتُ

فِرْعَوْنَ قُرَّتُ عَيْنٍ لِّيْ وَلَكَ ؕ لَا تَقْتُلُوْهُ ۖ عَسٰٓى اَنْ

يَّنْفَعَنَآ اَوْ نَتَّخِذَهٗ وَلَدًا وَّهُمْ لَا يَشْعُرُوْنَ ۝

ஆற்றில் மிதந்து வந்த குழந்தை கண்டெடுக்கப்பட்டதும் பிர்அவ்னுடைய மனைவி எனக்கும் உமக்கும் கண்குளிர்ச்சியாக இக்குழந்தை இருக்கும் இதை நீங்கள் கொன்று விட வேண்டாம். நமக்கு இது பலனளிக்கக்கூடும். அல்லது நாம் இதனை நமக்கு புதல்வராய் ஆக்கி கொள்ளலாம் என்று கூறினாள். அவர்களோ இதனால் என்ன நேரும் என்பதை உணர்ந்து கொள்ளவில்லை.

பிறகு மூஸா (அலை) அவர்களை வளர்த்தார்கள். பெரிதானார்கள். நபிப்பட்டமும் கிடைத்தது. இவர்களை நபிஎன ஆஸியா அம்மையார் ஏற்றுக் கொண்டார்கள். இது பிர்அவ்னுக்கு தெரிந்ததும் அவ்வம்மையாரை மிகக் கடுமையாக தண்டித்தான். எந்த அளவு என்றால் கையையும் காலையும் கட்டி சுடுமணலில் போட்டுவிடுவான். அவர்களின் நெஞ்சின் மீது மிகப்பெரிய சம்மதையை தூக்கி வைப்பான். இப்படியே பல நாட்கள் செய்தான். அந்த கஷ்டத்தை சகிக்க முடியாமல் இறைவனிடம் துஆ செய்தார் எப்படி?

وَضَرَبَ اللّٰهُ مَثَلًا لِّلَّذِيْنَ

اٰمَنُوا امْرَاَتَ فِرْعَوْنَ ۘ اِذْ قَالَتْ رَبِّ ابْنِ

لِي عِندَكَ بَيْتًا فِي الْجَنَّةِ وَنَجِّنِي مِن
فِرْعَوْنَ وَعَمَلِهِ وَنَجِّنِي مِنَ الْقَوْمِ الظَّالِمِينَ ⑪

ஈமான் கொண்டவர்களுக்கு பிர்அவ்னுடைய மனைவியை உதாரணமாக அல்லாஹ் ஆக்கியுள்ளான். என்னுடைய ரப்பே! சொர்க்கத்தில் உனக்கு அருகாமையில் எனக்காக ஒரு வீட்டை கட்டித்தருவாயாக. பிர்அவ்னை விட்டும்அவனுடைய தீய செயலை விட்டும் என்னை நீ காப்பாற்றுவாயாக இன்னும் அனியாயக்காரர்களின் கூட்டத்தைவிட்டும் என்னை நீர் காப்பாற்றுவாயாக! என்று கூறிய நேரத்தை நினைவுகூர்ந்து பாருங்கள் (என அல்லாஹ் குறிப்பிட்டுகாட்டுகிறான்)

சூரத்துத்தஹ்ரீம் 66வது சூரா வசனம்-11

இங்கு நமக்கு என்ன படிப்பனை என்றால் பிர்அவ்னுடைய மனைவியை எவ்வளவு கொடுமைபபடுத்தியும் அவர்கள் ஈமானை இழக்கவில்லை. அல்லாஹ்வின் மீது முழு நம்பிக்கை வைத்தார்கள். அல்லாஹ்விடம் அவனின் தீங்கை விட்டும் பாதுகாப்புத் தேடினாாகள்.

அதுபோல்தான் நமக்கும் எந்தக் கஷ்டம் வந்தாலும் அல்லாஹ்வின் மீது உள்ள நம்பிக்கை குறைந்து விடக்கூடாது. பொறுமையுடன் இருந்து கொண்டு அந்த துன்பத்திலிருந்து சீக்கிரம் விடுவிக்க வேண்டும் எனறு இறைவனிடம் இறைஞ்சிக் கொண்டே இருக்க வேண்டும். எனவே கஷ்டம் ஏறபடும்போது பொறுமையுடன் இருக்க வேண்டும் என்பதும், அதிலிருந்து சுகமளிக்குமாறு இறைவனிடம் இறைஞ்ச வேண்டும் என்பதையும் இவ்வசனம் தெளிவுபடுத்திக் காட்டுகிறது. ஆகவே கஷ்டம் ஏறபடும்போது பொறுமையுடன் இருபபதற்கும், அதைவிட்டும்

நிவாரணம் அளிக்கும்படி இறைவனிடம் இறைஞ்சக்கூடிய நன்மக்களாக நம் அனைவரையும் அல்லாஹ் ஆக்கி அருள் புரிவானாக! ஆமீன்!!

## 12. மூஸா (அலை) அவர்களின் சகோதரி மர்யம் (அலை)

மூஸா (அலை) அவர்கள் குழந்தையாக இருந்தபோது அவர்களை ஒருபெட்டியில் வைத்து கடலில் விட்ட தாய் யூகாநிதா தன்மகள் -(மூஸா(அலை)அவர்களின் சகோதரி) மர்யமிடம் கூறினார். எனதருமை மகளே இந்த பெட்டி எங்கு செல்கிறது என்ன ஆகிறது என்பதை நன்கு கண்காணித்து வாரும் என கூற அதன் அந்த மர்யம் நைல்நதிக் கரையில் அதன் பின்னாலேயே செல்கிறார். அது பிர்அவ்னுடைய வீட்டினருகில் சென்றதை தம்தாயிடம் கூறி அம்மா! அந்த வீட்டில் நான் பணிப் பெண்ணாக பணியாற்ற அனுமதி தாருங்கள். அதன்மூலம் அந்த குழந்தையை (என் சகோதரரை) நான் கண்காணித்து வருகிறேன் என கூற அதற்கு தாயும் சம்மதிக்கிறார். அதன்படி பணிப் பெண்ணாக அமர்கிறாள். அந்த குழந்தைக்கு பாலூட்டுவ தற்காக செவிலித்தாய் அழைக்கப் படுகிறார்கள். ஆனால் அந்த குழந்தை யாரிடமும் பால் குடிக்க மறுத்து விடுகின்றது. அப்போது மர்யம் இதுதான் சந்தர்ப்பம் என கருதி அங்கு அரசியாரிடம் கூறுகிறாள்.

அரசியார் அவர்களே! என் தாய்க்கு ஒரு பெண் குழந்தை பிறந்து இறந்து விட்டது. ஆனால் என் தாய்க்கு அதிகமாக பால் சுரக்கிறது. நீங்கள் விரும்பினால் என் தாயை அழைத்து வருகிறேன். ஒரு வேளை இக்குழந்தை என் தாயிடம் பால் குடிக்கிறதா என பார்க்கலாம் என கூற சரி அழைத்து வா! என அரசியார் கூற அழைத்து வரப்படுகிறது. அந்த குழந்தை மருவி

மருவி பால் குடிக்கிறது. இங்கு அல்லாஹ் சொன்னதைப்போல் அந்த தாயிடமே மீட்டிவிட்டான். திரும்ப ஒப்படைத்து விட்டான். அந்த யூகாநிதி தன் குழந்தை என கூறினால் கொன்று விடுவார்களோ "என பயந்து தன்குழந்தை பெண்குழந்தை என்றும் அது பிறந்தவுடன் மரித்துவிட்டது என்றும் கூறச்சொல்ல அதன்படி மர்யம் கூறிவிட்டார். இப்போது யூகாநிதி தன் குழந்தை தானே பால் ஊட்டி அதற்கு கூலிபெற்று வந்தார். காரணம் சொன்னால் கொன்று விடுவார்களோ என்ற பயம்தான்.

قَالَتْ لِاُخْتِهٖ قُصِّيْهِ فَبَصُرَتْ بِهٖ عَنْ جُنُبٍ وَّهُمْ
لَا يَشْعُرُوْنَ ﴿١١﴾ وَحَرَّمْنَا عَلَيْهِ الْمَرَاضِعَ مِنْ قَبْلُ
فَقَالَتْ هَلْ اَدُلُّكُمْ عَلٰٓى اَهْلِ بَيْتٍ يَّكْفُلُوْنَهٗ لَكُمْ
وَهُمْ لَهٗ نٰصِحُوْنَ ﴿١٢﴾ فَرَدَدْنٰهُ اِلٰٓى اُمِّهٖ كَىْ تَقَرَّ
عَيْنُهَا وَلَا تَحْزَنَ وَلِتَعْلَمَ اَنَّ وَعْدَ اللّٰهِ حَقٌّ وَّلٰكِنَّ
اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ ﴿١٣﴾

குழந்தையை ஆற்றில் விட்டபின் அதனுடைய சகோதரியிடம்,'' நீ அதனைப பின் தொடர்ந்து செல். '' எனறு தாய் கூறினார். அவர்கள் அறியாத விதத்தில் தொலைவிலிருந்து அதனை அவள் பார்த்து கொண்டிருந்தாள். தாயிடம் அனுப்புவதற்கு முன்னரே அதன் மீது பால் கொடுக்கும்

பெண்களை நாம் தடுத்து விட்டோம். எனவே பிர்அவ்னின் குடும்பத்தாரிடம் உங்களுக்காக அதற்கு பொறுப்பேற்றுக் கொள்ளும் ஒரு வீட்டினரை உங்களுக்கு நான் அறிவிக்கட்டுமா? இன்னும் அவர்கள் அதற்கு நன்மையையே நாடுகிறவர்கள் என்று அக்குழந்தையின் சகோதரி கூறினாள்.

இவ்வாறாக மூஸாவை அவருடைய தாயிடம் அவளுடைய கண்குளிர்ச்சியடைவதற்காகவும், அவள் கவலைப்படாமலிருப்ப தற்காகவும் நிச்சயமாக அல்லாஹ்வின் வாக்கு உண்மையான தென்று அவன் அறிந்து கொள்வதற்காகவும்,நாம் மீட்டிக் கொடுத்தோம். எனினும் அவர்களில் பெரும்பாலானவர்கள் இந்நிகழ்ச்சியை அறிய மாட்டார்கள்.

சூரத்துல் கஸஸ்-28வது சூரா- வசனம்- 11,12,13,

இங்கு நமக்கு படிப்பினை என்னவென்றால் மூஸா (அலை) சகோதரியின் பெயர் மர்யம். அந்த மர்யம் தன் தந்தையின் சொல்லைத் தட்டாமல் ஏற்று செயல்பட்டதுடன் தாயின் கட்டளையான குழந்தையை கவனித்து வரவேண்டும் என்பதை கவனித்தில் கொண்டு பிர்அவ்ன் குடும்பத்தாரிடம் உண்மையை கூறிவிடாமல் மிகவும் சாதுர்யமாக நடந்து கொண்டார்கள் எனவே நாம் நம் தாய் சொல்லை கேட்டு அதன்படி அவர்களின் அன்பையும் துஆவையும் பெறும் அளவுக்கு நல்ல பண்போடு நடந்து கொள்ள வேண்டும். என்பதை இந்த ஆயத்து நமக்கு உணர்த்திக் காட்டுவதுடன் தாயின் கட்டளை எதுவானாலும் அதைத் தட்டாமல் செயல்படுத்த வேண்டும் என்பதையும் உணர்த்துகின்றது . ஆகவே எப்போதுமே பெற்றோர் சொல்லுக்கு மதிப்பளிக்க வேண்டும். அவர்களின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியவேண்டும். அவர்கள் சொல்லை எப்போதும்தட்டக் கூடாது. இதைப்பற்றி பெருமானார் (ஸல்) கூறும் போது தாயின்

பாதடியில் சுவர்க்கம் இருக்கிறது என கூறினார்கள். அதாவது தாய்க்குப் பணிவிடை செய்து அவர்களின் துஆவை பெற்று அதன்மூலம் சுவர்க்கத்திற்குரியவனாக ஆகிவிடு என்பது கருத்தாகும். ஆகவே நாம் எப்போதும் பெற்றோரின் சொல்லை மதித்து அவர்களின் கட்டளைகளுக்கு கீழ்படிந்து அவர்களுக்குப் பணிவிடை செய்து அவர்களின் நல்துஆவை பெற்றுக் கொள்ளக்கூடிய நல்ல மக்களாக நம் அனைவரையும் எல்லாம்வல்ல அல்லாஹ் ஜல்ல ஷஃனுஹூ வதஆலா ஆக்கி அருள் புரிவானாக! ஆமீன்!!

## 13. மூஸா (அலை) அவர்களின் மனைவி ஸபூரா (அலை)

மூஸா (அலை) அவர்கள் பிர்அவ்னிடம் வளர்ந்து வரும்போது ஒருநாள் மூஸா (அலை) அவர்களின் குடும்பத்தை சார்ந்த ஒருவருக்கும் பிர்அவ்ன் குடும்பத்தை சார்ந்த ஒருவருக்கும் ஏதோ வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. அதை சரி செய்ய மூஸா (அலை) விசாரித்த போது பிர்அவ்ன் கூட்டத்தை சேர்ந்தவன் மூஸா (அலை) தாக்க எத்தனித்தான். அப்போது அவனை ஓங்கி ஒரு குதது விடடாாகள். அவன் கீழே சாய்ந்தான். அவன் உயிரும் பிரிந்தது. அப்போது மூஸா (அலை) இது பிர்அவ்னுக்கு தெரிந்தால் நம்மைக் கொன்று விடுவான் என பயந்து அவ்விடத்தைவிட்டும் அகன்று வேறொரு நாட்டிற்கு சென்றார்கள். ஏழு பகல் ஏழு இரவு நடந்து கொண்டே இருந்தார்கள். புற்களையும்,இலைகளையும் உண்டு கொண்டு "இறைவா இவ்வக்கிரமக்காரர்களை விட்டும் என்னை காத்தருள் என இறைஞ்சி கொண்டே சென்றார்கள். அதன்பின் அவர்கள் என் இறைவன் எனக்கு நேர்வழி அறிவிக்கக்கூடும் என்று தமக்குத் தாமே ஆறுதல் கூறிக் கொண்டார்கள்.

இறுதியாக ஒரு மரத்தின் நிழலை அடைந்தார்கள். அதன் அருகில் கிணறு ஒன்று இருந்தது. அக்கிணற்றில் சில இளைஞர்கள் தண்ணீர்இறைத்து தம் ஆடுகளுக்கு நீர் புகட்டிக் கொண்டிருந்தார்கள். சற்று தொலைவில் இரண்டு பெண்கள் சில ஆடுகளுடன் நின்றுகொண்டிருந்தார்கள். அந்த இளைஞர்கள் தங்கள் ஆடுகளுக்கு நீர் புகட்டியதும் அந்த கிணற்றை மூடிவிட்டு தங்கள் இடம் நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். அப்பெண்களை அவர்கள் பொருட் படுத்தவே இல்லை. அப்போது மூஸா (அலை) அப்பெண்களை நோக்கிச் நீங்கள் ஏன் நின்று கொண்டிருக்கிறீர்கள் என கேட்கக் கிணற்றில் மூடி இருக்கும் கல் பலமானது, வாளியும் பலமானது. எங்கள் தந்தையோ வயது முதிர்ந்தவர். நாங்களோ இவ்விளைஞர்கள் தங்கள் ஆடுகளுக்கு புகட்டிய போது எஞ்சிய நீரை எங்கள் ஆடுகளுக்கு நாங்கள் புகட்டிச் செல்வோம். ஆனால் இன்று இவர்கள் தண்ணீர் மீதமில்லாமல் எல்லாவற்றையும் தங்கள் ஆடுகளுக்கு புகட்டி சென்றுவிட்டனர் என கூற அப்போது மூஸா (அலை)அவர்கள் மீது இரக்கம் கொண்டு அந்த பலபேர் சேர்ந்து தூக்கக் கூடிய பலம் வாய்ந்த கல்லை தாங்கள் ஒருவராகவே தூக்கி தள்ளி வைத்து விட்டு வாளியில் தண்ணீர் இறைத்து அவ்வாடுகளுக்கு புகட்டச்செய்துவிட்டு மீண்டும் அம்மர நிழலிலே போய் அமர்ந்து கொண்டு இறைவா பிர்அவ்னுடைய தீங்கிலிருந்து என்னைப் பாதுகாத்தாய். எல்லாப் புகழும் உனக்கே. எனக்கு இப்போது உணவு தேவைப்படுகிறது. நான் அதை விரும்பக்கூடியவனாக உள்ளேன் என பிரார்த்திக் இது அப்பெண்களின் செவியில் விழுந்து விடுகிறது.

அப்பெண்கள் சென்று நடந்ததை தம் தந்தையிடம் கூறியபோது அவர் பசியோடிருப்பார்போல தோன்றுகிறது அவரை அழைத்துவா உணவளிக்கலாம் என கூற அவர்களின்

ஒருவர் வந்து எம் தந்தை உம்மை அழைக்கிறார் என கூற அதன்படி அங்கு சென்று எதிப்தில் நடந்த விஷயத்தையும், பிர்அவ்னைப் பற்றியும் தான் இங்கு வந்தது பற்றியும் ஒன்று விடாமல் எடுத்து கூறுகிறார்கள். மூஸா (அலை) அவர்கள் அப்போது அந்த தந்தையான ஷுஐப்(அலை)அவர்களைப் பார்த்து கவலைப்படாதே! அநியாயக்காரர்களை விட்டும் வெற்றி பெற்றுவிட்டாய் என கூறி அவர்களுக்கு உணவளிக்கிறார்கள். அப்போது மூஸா (அலை)அவர்கள் நான் புனிதமான குடும்பத்தைச் சார்ந்தவன். செய்த உதவிக்கு கூலி பெற மாட்டேன் என கூற இது கூலி அல்ல. மாறாக எங்களிடம் யார்வந்தாலும் அந்த விருந்தாளிக்கு விருந்தளிப்பது மரபு. எனவே இதை உட்கொள்ளும் என் கூற அதன்படி அதை உண்ணுகிறார்கள். அப்போது இந்த இரண்டு பெண்களில் ஒருவர் கூறுகிறார் தந்தையே இவர் மிகவும் பலசாலியாகவும், ஒழுக்கம் நிறைந்தவராகவும் காணப்படுகிறார். இவரை நம் ஆடுகளை மேய்ப்பதற்காக நியமிக்கலாம் அல்லவா என கூற சரி அப்படியே செய்யலாம் என கூறுகிறார்கள். அவர்கள் உண்டு முடித்ததும் ஷுஐப் (அலை) அவர்கள் மூஸா (அலை) அவர்களிடம் கூறுகிறார்கள் நீர் நம்மிடம் எட்டுஆண்டுகள் ஆடுமேய்த்து வரவேண்டும். பத்துஆண்டுகள் மேய்த்தால் அது எனக்கு நீ செய்த உபகாரமாகும். அதற்குபின் இரு மகள்களில் ஒருவரை உமக்கு திருமணம் முடிந்து வைப்பேன் என கூற அதை ஏற்றுக்கொண்டு ஆடுகளை மேய்த்து வருகிறார்கள். அவைகளை மேய்ப்பதற்காக ஒருஅஸா என்று சொல்லக்கூடிய குச்சியும் கொடுத்தனுப்பு கிறார்கள். இதைப் பத்திரமாக வைத்துக்கொள்; இது அற்புதம வாய்ந்தது என கூறி அனுப்புகிறார்கள். அதன்படி மூஸா (அலை) ஆடு மேய்த்து வந்தார்கள். குறிப்பிட்ட தவணையும் முடிந்தது

அப்போது ஷுஐப் (அலை) தன் மூத்தமகள் ஸபூராவை மூஸா (அலை) அவர்களுக்கு திருமணம் முடித்து வைக்கிறார்கள். இரண்டாண்டுகள் ஓடி மறைகிறது. மூஸா (அலை) எகிப்திலிருந்து வந்து பத்து ஆண்டுகள் நிறைவு பெறுகின்றது. இப்போது தம்தாய், சகோதரர்களைக் காண வேண்டும் என்ற ஆவல் ஏற்படுகின்றது. இதை ஷுஐப் (அலை) அவர்களிடம் கூற எனக்கோ வயதாகிவிட்டது. என்பார்வையும் மங்கிவிட்டது . இந்நிலையில் நீ செல்வதாக கூறுகிறாய். உன் விருப்பத்திற்கு நான் தடையாக இருக்கவில்லை. என் கண்ணொளியை நான் மீண்டும் பெறுவதற்கு இறைவனிடம் இறைஞ்சுவீராக! என கூற அதன்படி இறைஞ்சினார்கள். அவர்களுக்கு கண்ணொளியும் ஏற்பட்டது. பிறகு தன் அருமை மாமனாரிடம் விடைபெற்று தன் மனைவியையும் தன்னுடன் அழைத்து கொண்டு தன் ஊர் நோக்கிப் பயணமானார்கள். அப்போது மூஸா(அலை) அவர் களின் மனைவி நிறைமாத கர்ப்பிணியாக இருந்தார். மூஸா (அலை) பொதுப்பாதையில் சென்றால் தனக்கு ஆபத்து ஏற்படலாம் என கருதி வேறு வழியாக தம் மனைவியுடன் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது திடீரென பாதைமாறி வழி தவறிவிட்டது. எங்கு செல்கிறோம் என்ன செய்கிறோம் என்பதைக் கூட அவர்களால் உணரமுடிய வில்லை. கடுமையான இருளில் தட்டுத்தடுமாறி அடியெடுத்து வைத்து கொண்டிருந்தார்கள்.

துவா என்னும் பள்ளத்தாக்கை அடைந்த போது ஸபூராவிற்கு பிரசவ வேதனை அதிகமானது. இதை தம் கணவரிடம் கூற அவர்கள் சிக்கிமுக்கி கல்லை அடித்து தீ பற்றவைத்தார்கள். அது தீ பற்றவில்லை. தம் அஸாவை கீழே நட்டார்கள். அதிலும் முன்போல் தீ வரவில்லை. மேலும் கடும் இருள் கவ்விக்கொண்டது. ஒருவரின் முகம் இன்னொருவருக்கு

தெரியவில்லை. இந்த நேரத்தில் என்ன செய்வது என்று மூஸா (அலை) திகைத்துக் கொண்டும் யோசித்துக் . கொண்டும் இருக்கும் போது சற்று தூரத்தில் ஒரு நெருப்பு தெரிந்தது. தம் மனைவியிடம் நீ இங்கேயே இரு நான் சென்று நெருப்பு பற்றவைத்து வருகிறேன் என்று கூறி அவர்களை அங்கேயே தங்க வைத்து விட்டு மூஸா (அலை) அந்த நெருப்பை நோக்கி நெருங்க அது மிகப்பெரும் ஜுவாலையாக எரிந்தது. ஆனால் அது வெண்மையாகவும், புகையற்றதாகவும் இருந்தது. கீழே கிடந்த சுள்ளிகளை எடுத்து அதில் பற்ற வைக்கலாம் என எண்ணி அதை எடுத்து நீட்டியபோது அந்த நெருப்பு நகர்ந்து சென்றது. மூஸா (அலை) திரும்பி வர பின்னாலேயே வந்தது. இப்படியே அதன்பின்னால் பனிரெண்டுமைல் தூரம் நடந்து விட்டார்கள். பிறகு அந்த ஒளி பேசத்துவங்கியது. மூஸாவே நான்தான் இறைவன் என்னைத் தவிர வணங்குவதற்கு தகுதியானவன் யாரும் இல்லை. நான் உம்மை என் தூதராக தேர்ந்தெடுத்து கொண்டேன். ஆகவே வஹீமூலம் உனக்கு அறிவிக்கப்படுவதை நீர் செவியுறும். என்னையே நீர் வணங்கும். என்னை தியானித்து கொண்டி ருக்கும் பொருட்டு தொழுகையை நீ மேற்கொள்ளும்.

நிச்சயமாக மறுமை மக்களை வந்தடையும். ஒவ்வொரு ஆத்மாவும் தன் செயலுக்குரிய கூலியை பெறும் பொருட்டு நான் அதனை மனிதர்களுக்கு ஒளிவு மறைவாக வைக்க விரும்புகிறேன். எனவே அதனை நம்பாதிருக்க வேண்டாம். உடல் இன்பத்தைப் பின்பற்றுவது உம்மை அதற்கு அஞ்சாது தடுத்துவிடவும் வேண்டாம். அவ்வாறு செய்யின் நீர் அழிந்தொழிந்திடுவீர் என இறைவன் உரையாடல் நிகழ்த்தினான்.

அப்போது மூஸா (அலை) அவர்களுக்கு மனைவியை தன்னந்தனியாக விட்டுவந்தது ஞாபகம் வந்தது. அப்போது

அங்கிருந்த பாறையிலிருந்து ஒரு புழு வெளிப்பட்டு அது தன்வாயில் பச்சை இலைத்துண்டு ஒன்றை வைத்திருப்பதையும். அது என்னை இந்த பாறையினுள் வாழச்செய்து எனக்கு உணவளித்து வருகிற இறைவனுக்கே எல்லாப் புகழும் என கூறியதையும். கண்ணுற்ற மூஸா (அலை) அவர்களைப் பார்த்து அல்லாஹ் இதற்கு உணவு கொடுக்கக் கூடிய நான் உன் மனைவியின் நலனை நான் எவ்வாறு மறப்பேன். நீ சந்தோசமுடன் திரும்பி செல்லும் உன் மனைவி அழகான ஒருஆண்மகனை ஈன்றெடுத் துள்ளாள் என கூறினான். அதன்படி அங்கு சென்றபோது அதேபோல் ஆண்குழந்தையுடன் வீற்றிருந்தார். கணவரைக் கண்டதும் அவருக்கு ஏற்பட்ட சந்தோஷத்திற்கு அளவில்லை. மூஸா (அலை) தம் மனைவியை தன்னந்தனியாக விட்டுச் சென்றதை இங்கு இறைவன் குறிப்பிட்டுக் காட்டுகிறான்.

فَلَمَّا قَضٰى مُوْسَى الْاَجَلَ وَسَارَ بِاَهْلِهٖۤ اٰنَسَ
مِنْ جَانِبِ الطُّوْرِ نَارًا ۚ قَالَ لِاَهْلِهِ امْكُثُوْۤا اِنِّىْۤ
اٰنَسْتُ نَارًا لَّعَلِّىْۤ اٰتِيْكُمْ مِّنْهَا بِخَبَرٍ اَوْ جَذْوَةٍ
مِّنَ النَّارِ لَعَلَّكُمْ تَصْطَلُوْنَ ﴿٢٩﴾

இவ்வாறாக மூஸா தவணையை நிறைவேற்றி தம் குடும்பத்தாருடன் பிரயாணம் சென்றபோது தூர்மலையின் புறத்திலிருந்து ஒரு நெருப்பைப் பார்த்தார். அப்போது தம் குடும்பத்தாரிடம் நீங்கள் இங்கேயே தங்கியிருங்கள். நிச்சயமாக

நான் ஒரு நெருப்பைக் காண்கிறேன். அதிலிருந்து ஏதேனும் ஒரு செய்தியோ,அல்லது நீங்கள் குளிர் காய்வதற்காக நெருப்பின் ஒருபந்தத்தையே உங்களிடம் நான் கொண்டுவருகிறேன் என்று கூறினார்கள். சூரத்துல் கஸஸ்-28வது சூரா வசனம் -29

இங்கு நமக்கு என்ன படிப்பினை என்றால் கணவன் இங்கேயே இரு என்று கூறியபோது இல்லை உம்முடன் வருவேன் என்ற கூறாமல் கணவரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு வனாந்திரத்தில் தன்னந்தனியே இருந்து வர சம்மதித்தார்கள். கணவர் திரும்பி வர பலநாட்கள் ஆகியும் பொறுமையோடு இருந்தார்கள். அதனால் அவ்வம்மையாரை அல்லாஹ் மலக்குகள் மூலமாக பாதுகாப்பு அளித்ததுடன் உணவும் வழங்கி அம்மலக்கு கள் மூலம் பிரசவமும் பார்க்க வைத்தான். இதிலிருந்து நமக்கு என்ன தெரிகிறது என்றால் கணவன் என்ன சொன்னாலும் அவரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்.அவர் சொல்லுக்கு மறுப்பு தெரிவிக்கக் கூடாது. மாறுசெய்யக்கூடாது. சில நேரத்தில் கணவரை விட்டும் பிரியக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டாலும் அதையும் பொறுத்துக் கொண்டு அமைதியுடன் இருந்து வர வேண்டும். அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடிக் கொள்ள வேண்டும். அப்படி கணவரின் சொல்லுக்கு கட்டுப்பட்டு நடக்கும் போது அல்லாஹ்வின் பாதுகாப்பும் பொருத்தமும் கிடைக்கிறது.

ஒரு ஸஹாபி வியாபாரத்திற்காக வெளியூர் செல்லவேண்டி இருந்தது. தன் மனைவியிடம் ''நான் திரும்பி வரும் வரை நீ வீட்டை விட்டு வெளியில்செல்லக்கூடாது'' என கூறிச் சென்றார். நாட்கள் சில சென்றன. அவ்வம்மையாரின் தந்தை மிகவும் உடல் நலக்குறைவாகிவிட்டார் என்ற செய்தி கேட்டு பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஆள் அனுப்பினார். என் கணவர் நான்

திரும்பி வரும் வரை வெளியில் செல்லக்கூடாது எனக் கூறி வியாபார விஷயமாக வெளியூர் சென்றிருக்கிறார். ஆனால் என் தந்தையோ மிகவும் உடல் நலம் பாதிக்கப் பட்டுள்ளார். என்னைப் பார்க்க ஆவலாக இருக்கிறார். நான் அவரைச் சந்திக்கச் செல்லலாமா? என கேட்டனுப்ப, கணவரின்சொல்லுக்கு கட்டுப்பட வேண்டும். எனவே செல்ல வேண்டாம் என கூறியனுப்பினார்கள். சில நாட்களில் அந்த தந்தை மரணித்து விட்டார் என்ற செய்தி வந்ததும் இதை பெருமானார்(ஸல்) அவர்களுக்கு சொல்லியனுப்பி அனுமதி கேட்டார்கள். கணவர் சொல்லுக்கு கட்டுப்பட வேண்டும் என்று சொல்லி அனுப்பினார்கள். இறைவனிடம் தொழுது தந்தையின் பாவ மன்னிப்பிற்காக துஆ செய்தார்கள். ஜனாஸாவைப் பார்க்க போகவில்லை. பொறுமையுடன் இருந்துவிட்டார் அவ்வம்மை யார். அந்த நண்பர் திரும்பிவந்து பெருமானார்(ஸல்)அவர்களை சந்திக்கும் போது உம்மனைவி உம் பேச்சை கேட்டு வீட்டைவிட்டு வெளியேறாததால் உன் மனைவியின் பாவத்தை அல்லாஹ் மன்னித்தான். அவரின் தந்தையின் பாவத்தையும் மன்னித்தான்.

ஆகவே நம் தாய்மார்கள் தன் தணவர் வெளியூர் சென்றிருந்தால் அவர் அனாவசியமாக வெளியில் எங்கும் செல்லக் கூடாது என்று கூறிவிட்டுதான் செல்வார். அப்போது அவசியமில்லாமல், தேவையில்லாமல் வீட்டை விட்டும் வெளியேறக்கூடாது. ஐந்து நேரம் தொழுது கொண்டும், குழந்தைகளை கணவரின் உடல் சுகத்திற்கும், நீண்ட ஆயுளுக்கும் ஹலாலான சம்பாத்தியத்திற்கும் துஆ செய்து கொண்டே இருக்க வேண்டும் என்பது இந்த ஹதீஸிலிருந்து நமக்கு விளங்குகிறது. ஆகவே எல்லா சூழ்நிலையிலும்

மனைவிகள் கணவன் மார்களுக்கு கட்டுப்பட்டு அவர்களின் சொல்லை மதித்து அவர்களுக்கு கண்ணியம் செய்யக் கூடியவர்களாக அல்லாஹுதஆலா நம் அனைவரையும் ஆக்கி அருள் புரிவானாக! ஆமீன்.

## 14. பெருமானார் (ஸல்) அவர்களின் மனைவிமார்கள்

பெருமானார்(ஸல்) அவர்கள் தமது 25வது வயதில் கதீஜா (ரலி) அவர்களைத் திருமணம் முடித்தார்கள். சுமார் 24 வருடம் தங்களின் 50 வயது வரை அவர்களுடன் வாழ்ந்தார்கள். ஹிஜ்ரத்திற்கு 3 வருடம் முன்பு கதீஜா (ரலி) அவர்கள் வஃபாத்தானார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் ஹிஜ்ரத்திற்கு பிறகு தங்களின் 53 வயதிற்குப் பிறகுதான் ஏனைய 10 மனைவிகளை திருமணம் முடித்தார்கள். கணவனும் மனைவியும் இஸ்லாத்தில் வந்து கணவன் பேரில் ஷஹீதாக்கப்பட்டதால் மனைவிக்கு ஆறுதல் சொல்ல யாரும் இல்லாத போது அவர்களை திருமணத்தின் மூலம் தம் மனைவியாக ஆக்கி அவர்களுக்கு சந்தோசமான வாழ்க்கையை வழங்கினார்கள். இது போன்ற சூழ்நிலையின் காரணமாகவும், சில தவிர்க்க முடியாத காரணங்களுக்காகவுமே எஞ்சிய 10 பேரை திருமணம் முடிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. வேறு எந்த நோக்கமுமல்ல. அந்த காரணங்களை பெருமானார் (ஸல்) அவர்கள் பலதிருமணங்கள் செய்தது ஏன்? என்ற புத்தகத்தில் காண்க. இது போன்ற தவிர்க்க முடியாத காரணத்திற்காக அல்லாஹ்வின் அனுமதியின் பேரில் 10 பேரை திருமணம் முடித்தார்கள். இதை பற்றி அல்லாஹ் திருமறையில்

நபியே! பெண்களில் எவருக்கு மஹர்களைக் கொடுத்திருக் கிறீரோ, அத்தகைய உம்முடைய மனைவியாரையும், அல்லாஹ் போரின் மூலம் கொடுத்தவற்றில் உம்முடைய் வலக்கரம் சொந்தமாக்கிக் கொண்ட அடிமைகளையும் உமக்கு நிச்சயமாக நாம் ஆகுமாக்கி வைத்துள்ளோம். இது மற்ற முஃமின்களுக்கின்றி உமக்கு மட்டும் பிரத்தியேகமானதாகும்.

சூரத்துல் அஹ்ஜாப்-33வது சூரா வசனம் -50

இப்படி அல்லாஹ் சூழ்நிலையை கவனித்து நபிகள்நாயகம் (ஸல்) அவர்களுக்கு அனுமதி வழங்கி விட்ட போது அதில் குறுக்கிட ஆட்சேபணை செய்ய நமக்கு எந்த உரிமையுமில்லை.

நபிகள் நாயகம் (ஸல்) தம் மனைவியருக்கு தினமும் செலவுக்கு ஒரளவுக்கு போதுமான தொகையைக் கொடுத்து வந்தார்கள். அப்போது அப்பரிசுத்த மனைவி மார்கள் நீங்கள் கொடுக்கும் தொகை எங்களுக்குப் போதவில்லை . ஆகவே அதை அதிகமாக தர வேண்டும்என வேண்டினார்கள். ஆனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கோ அதிகமாக கொடுக்கவும் முடியாது அவ்வாறு அதிகமாக கொடுப்பதை அவர்கள் விரும்பவும் இல்லை. எனவே சில நாட்களுக்கு அவர்களில் யாரிடமும் பேசமாட்டேன் என பெருமானார்(ஸல்) தங்களுக்கு தாங்களே முடிவு செய்து பள்ளியிலேயே தங்கி விட்டார்கள். அப்போது அல்லாஹ் இந்த ஆயத்தை இறக்கி வைத்தான்.

يَٰٓأَيُّهَا ٱلنَّبِيُّ قُل لِّأَزْوَٰجِكَ إِن
كُنتُنَّ تُرِدْنَ ٱلْحَيَوٰةَ ٱلدُّنْيَا وَزِينَتَهَا فَتَعَالَيْنَ
أُمَتِّعْكُنَّ وَأُسَرِّحْكُنَّ سَرَاحًا جَمِيلًا ۝٢٨ وَإِن كُنتُنَّ

تُرِدْنَ اللّٰهَ وَرَسُوْلَهٗ وَالدَّارَ الْاٰخِرَةَ فَاِنَّ اللّٰهَ
اَعَدَّ لِلْمُحْسِنٰتِ مِنْكُنَّ اَجْرًا عَظِيْمًا ۝

நபியே! உம் மனைவியருக்கு நீ கூறுவீராக! உலக வாழ்க்கையையும் அதன் அலங்காரத்தையும் விரும்புகிறவர்களாக நீங்கள் இருந்தால், வாருங்கள் உங்களுக்கு உலகப் பொருட்களை நான் கொடுத்து அழகான விடுதலையாக உங்களை நான் விவாக விடுதலை செய்து விடுகிறேன். அவ்வாறின்றி அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும், மறுமை வீட்டையும் விரும்புகிற வர்களாக நீங்கள் இருந்தால் நிச்சயமாக அல்லாஹ் உங்களில் நன்மை செய்கிறவர்களுக்கு மகத்தான நற் கூலியைச் சித்தப்படுத்தி வைத்துள்ளான்" சூரத்துல் அஹ்ஜாப்-33வது சூரா வசனம்-28, 29எனகூறிக் காட்டுகிறான். அப்போது அவர்கள் அல்லாஹ்வையும், அதன்தூதரையும், மறுமை வீட்டையும் தேர்ந்தெடுத்துக் கொண்டு தங்களின் செயலுக்கு மன்னிப்பு கேட்டுத் தங்களின் கோரிக்கையை திரும்பப் பெறறார்கள்.

இங்கு நமக்கு என்ன படிப்பினை என்றால் கணவனிடம் அது வேண்டும் இது வேண்டும் என்று கூறாமல் கண்டதைக் கேட்டு அவர்களுக்கு தொந்தரவு கொடுக்காமல் அவர்கள் வாங்கி கொடுப்பதைக் கொண்டு திருப்தி அடைய வேண்டும். மேலும் அவர்கள் செலவுக்கு கொடுப்பதைக் கொண்டு போதுமாக்கி சிக்கனமாக வாழவேண்டும். அவர்கள் அனுப்பி வைப்பதை கொண்டு சிக்கனமாக வாழ வேண்டும் என்பதும் அடிக்கடி அவர்களிடம் கண்டதைக் கேட்டு தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பதும் இந்த வசனத்திலிருந்து நமக்குத் தெளிவாக

விளங்குகிறது. மேலும் அவர்கள் கொடுப்பதைக் கொண்டே போதுமாக்கிக் கொள்ள வேண்டும். வருமானத்திற்கு மிஞ்சிய செலவு கூடாது என்பதும் தெளிவாக விளங்குகின்றது. ஆகவே நாமும் நம் வருமானத்திற்கு தகுந்த செலவு செய்து, தேவையற்ற சிலவுகளை குறைத்து எஞ்சியதை ஏழை எளியவர்களுக்கு தான தர்மம் செய்து சுகபோகமாக வாழும் வாழ்க்கை இவ்வுலகிலும், மறுஉலகில் இதன் மூலம் உயர்ந்த பல தரஜாக்களை படித்தரங்களை ஜல்லஷஃனுஹு தஆலா நம் அனைவருக்கும் நல்அருள் புரிவானாக! ஆமீன்!!

## 15. மு.:மினான பெண்களைப்பற்றி அவர்கள் செய்யக்கூடிய நற்செயல்களைப் பற்றி அல்லாஹ் விளக்கிக் கூறிக் காட்டுகிறான்:-

ஸஹாபாப் பெண்களில் சிலர் ஒருநாள் பேசிக் கொள்கின்றனர். எப்படி? அல்லாஹ் முஃமினான ஆண்களை பற்றித்தான் அதிகமாக கூறுகின்றான். பெண்களைப் பற்றி குறிப்பிடவில்லையே! ஒரு சமயம் நம்முடைய அமல்கள் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லையோ என பேசிக்கொள்கின்றனர். அப்போது இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கேட்க வேண்டும் என முடிவு செய்து உம்முஸலமா(ரலி) அவர்கள் பெருமானார் (ஸல்) அவர்கள் முன்னிலையில் வந்து யாரசூலல்லாஹ் அல்லாஹ் திருமறையில் பல இடங்களில் ஆண்களைப் பற்றித்தான் சிறப்பித்துக் கூறுகிறான். எங்களைப் பற்றி ஒன்றும் கூறவில்லையே என்று கூறியபோது இந்த ஆயத்து இறங்கியது.

إِنَّ الْمُسْلِمِينَ وَالْمُسْلِمَاتِ وَالْمُؤْمِنِينَ وَالْمُؤْمِنَاتِ

وَالْقٰنِتِيْنَ وَالْقٰنِتٰتِ وَالصّٰدِقِيْنَ وَالصّٰدِقٰتِ وَ
الصّٰبِرِيْنَ وَالصّٰبِرٰتِ وَالْخٰشِعِيْنَ وَ الْخٰشِعٰتِ وَ
الْمُتَصَدِّقِيْنَ وَالْمُتَصَدِّقٰتِ وَالصَّآئِمِيْنَ وَالصّٰٓئِمٰتِ وَ
الْحٰفِظِيْنَ فُرُوْجَهُمْ وَالْحٰفِظٰتِ وَالذّٰكِرِيْنَ اللّٰهَ كَثِيْرًا
وَّالذّٰكِرٰتِ اَعَدَّ اللّٰهُ لَهُمْ مَّغْفِرَةً وَّاَجْرًا عَظِيْمًا ۝

நிச்சயமாக முஸ்லிமான ஆண்களும் முஸ்லிமான பெண்ளும், முஃமினான ஆண்களும் முஃமினான பெண்களும் அல்லாஹ்வுக்கு வழிபடும் ஆண்களும் , வழிபடும் பெண்களும், உண்மை பேசும் ஆண்களும் உண்மைபேசும் பெண்களும், பொறுமையுள்ள ஆண்களும், பொறுமையுள்ள பெண்களும், அல்லாஹ்வுக்கு அஞ்சி நடக்கும் ஆண்களும் அஞ்சி நடக்கும் பெண்களும்இ, தர்மம் செய்யும் ஆண்களும், தர்மம் செய்யும் பெண்களும், நோன்பு வைக்கும் ஆண்களும் நோன்பு வைக்கும் பெண்களும், தம் கற்பை பாதுகாத்துக் கொள்ளும் ஆண்களும், பாதுகாத்துக் கொள்ளும் பெண்களும் அல்லாஹ்வை அதிகமாக திக்ரு செய்யும் ஆண்களும், அதிகமாக திக்ரு செய்யும் பெண்களும் இவர்களுக்கு மன்னிப்பையும் மகத்தான நற்கூலியையும் அல்லாஹ் சித்தப்படுத்தி வைத்துள்ளான்.

சூரத்துல் அஹ்ஜாப்-33வது சூரா வசனம் - 35

இங்கு ஆண்களாக இருந்தாலும் பெண்களாக இருந்தாலும் எப்படி உலகில் நடந்து கொள்ள வேண்டும் என்று அல்லாஹ் உபதேசிக்கின்றான். ஆண்களாக இருந்தாலும் பெண்களாக இருந்தாலும்

1. அல்லாஹ்வுக்கு வழிபட்டு நடக்கக்கூடியவர்களாக இருக்க வேண்டும்.

2. உண்மையையே பேசக்கூடியவர்களாக இருக்க வேண்டும். எல்லா நேரத்திலும் எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் உண்மைதான் பேச வேண்டும்.

3. எல்லா விஷயத்திலும் எல்லா நேரத்திலும் பொறுமையோடு நடந்து கொள்ள வேண்டும்.

4. தனிமையில் இருந்தாலும் சரி பலருக்கு மத்தியில் இருந்தாலும்சரி. எல்லா சூழ்நிலையிலும் எல்லா இடங்களிலும் எல்லா நேரத்திலும் அல்லாஹ்வை அஞ்சியே பயந்தே நடக்க வேண்டும்.

5. அதிகமாக தர்மம் செய்ய வேண்டும்.

6. ஒவ்வொரு வருடமும் ஒருமாதம் விடாமல் தொடர்ந்து நோன்பு பிடிப்பதுடன் முடிந்த அளவு நபிலான நோன்புகளையும் நோற்க வேண்டும்.

7. எப்போதும், எல்லா சூழ்நிலையிலும் தம் கற்பை பாதுகாத்து கொள்ள வேண்டும்.

8. அல்லாஹ்வை எந்த நேரமும் அதிகமாக திக்ரு செய்து வர வேண்டும்.

இப்படிப்பட்ட நற்செயல்களை அதிகமாகச் செய்து வருபவர்கள் அவர்கள் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையும் சுகமாக சுகபோகமாக அமையும். இறைவனின் மன்னிப்பும் கிடைக்கும்.

மறுமையில் நம் கற்பனைகளுக்கே எட்டாத மிகப்பெரிய மகத்தான நற்கூலியை அல்லாஹ் நிச்சயமாக தருவான் என்பதை இவ்வசனம் நம்மவர்களுக்கு தெளிவுபடுத்திக் காட்டுகிறது. ஆகவே இதுவரை கூறப்பட்டு வந்த அனைத்து நற்செயல்களையும் நாம் நம்வாழ்க்கையில் கடைபிடித்து வருவதற்கும் அதன் மூலம் இவ்வுலகிலும் மறு உலகிலும் மிகப்பெரிய சிறப்புக்களையும் கண்ணியத்தையும் உயர்வையும் அடைவதற்கும் அல்லாஹ் ஜல்ல ஷஃனுஹு வ தஆலா நம் அனைவருக்கும் நல்அருள் புரிவானாக! ஆமீன்!!

இதுவரை திருகுர்ஆனின் வசனங்களை வைத்து அதிலிருந்து கிடைக்கின்ற படிப்பினை களை இச்சிறியோனின் சிற்றறிவுக்கு எட்டும் அளவுக்கு குறிப்பிடப் பட்டுள்ளது. இது அல்லாமல் இன்னும் எத்தனையோ படிப்பினைகள் உள்ளது. அது இறைவனுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட இறை நேசர்களுக்கு கடலைப் போன்று கல்வி வழங்கப் பெற்றிருக்கிற வர்களுக்கு தெரியும். ஏனெனில் இத்திருமறைக்கு கடல்நீரை மையாக்கி மரங்களை பேனாவாக்கி விரிவுரை எழுதினாலும் அந்த மை தீர்ந்து போகும். அந்த பேனா தேய்ந்து போகும். ஆனால் இறை வசனத்தின் விளக்கம் மட்டும் முடிவு பெறாது என இறைவன் விவரித்துக் காட்டுகிறான்.

ஆகவே இதுவரை என்ன விஷயங்களை கூறப்பட்டுள்ளதே அதன்படி அதை கடைபிடித்து நடப்பதற்கு அல்லாஹ் உங்களுக்கும் எனக்கும் தல்ல தௌபீக் செய்தருள்வானாக! ஆமீன்! ஆமீன்! யாரப்பல் ஆலமீன்!!

**இறைவா! இச்சிறிய சேவையை என்னிலிருந்து ஏற்றுக் கொண்டு உனது மன்னிப்பையும் மகத்தான கூலியையும் எனக்கும் என் குடும்பத்தினர்களுக்கும் நீ தாராளமாக வழங்கிடுவாயாக. ஆமீன்.**